# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7 இதழ் 1 | ஆகஸ்ட் 3 | சர்வஜித்து ஆடி 18


| | | |
|---|---|---|
| என்ன சேதி? | ... | ... 7 |
| முதலைக் கண்ணீர்! | சாஸ்திரி | ... 9 |
| யாருக்கு லாபம்? | ... | ... 11 |
| கண் திறந்தது! | க. க. | ... 17 |
| வட்டமேஜை | ... | ... 24 |
| ரோகிணி எங்கே? | பி. எஸ். சேஷாத்ரி | ... 25 |
| பாப்பா மலர் | ராஜி | ... 34 |
| அபூர்வ மனிதன் | ஸோமாஸ் | ... 37 |
| சொல்ல வந்த வாய் மூடிவிட்டது! | டி. கே. சி. | ... 43 |
| சந்திர ஹாரம் | பிரேம்சந்த் | ... 47 |
| காலக்ஷேபம் | ... | ... 58 |




கொஞ்ச நாளைக்கு முன்பு டில்லியில் ஆசிய உறவு மகாநாடு என்பதாக ஒரு மகாநாடு நடந்தது அல்லவா? அந்த மகாநாட்டுக்கு ஆசியாக் கண்டத்தில் உள்ள ஒவ்வொரு தேசத்திலிருந்தும் பல முக்கிய பிரமுகர்கள் வந்திருந்தார்கள். மகாநாட்டுக்குத் தலைமை வகித்த கவியரசி சரோஜினி தேவி அந்தப் பிரமுகர்களை யெல்லாம் ஒவ்வொருவராகச் சபைக்கு அறிமுகம் செய்து வைத்துக் கொண்டு வந்தபோது, குறிப்பிட்ட ஒரு பிரமுகரைப் பார்த்து, "மனித உருவத்தில் வந்திருக்கும் இந்த அணு குண்டு யார் தெரியுமா?" என்று கேட்டார். மகாநாட்டில் ஒருவராவது பதில் சொல்லவில்லை. "இவர்தான் இந்தோனேஷியாவின் பிரதம மந்திரி டாக்டர் சுதான் ஷாரீர்" என்றார் ஸ்ரீமதி சரோஜினி. அதைக் கேட்டதும், எல்லோருடைய முகமும் பளிச்சென்று மலர்ந்தது.




ஸ்ரீமதி சரோஜினி சொன்னதில் மிகை எதுவும் இல்லை. டாக்டர் ஷாரீர் என்ற அந்த அணு குண்டு வெடித்துத்தான், இன்று இந்தோனேஷிய நாடு முழுவதும் தேச பக்திக் கனலும் சுதந்திரப் பெரு நெருப்பும் மூண்டிருக்கின்றன. டச்சு ஏகாதிபத்தியம் அதை அணைப்பதற்காக எவ்வளவோ முயற்சி செய்து வருகிறது. ஆனால் முடியவில்லை.

இன்று இந்தோனேஷியாவிலே டாக்டர் சுகர்ணுவுக்கு அடுத்தபடியாக ஜனங்களின் நன்மதிப்பைப் பெற்றுப் பிரபலமாக விளங்குபவர் டாக்டர் ஷாரீர் ஒருவரேயாகும்.

டாக்டர் ஷாரீர், வெளிநாட்டிலிருந்து கொண்டே இந்தோனேஷியாவுக்குச் சாதகமாக உலக அபிப்பிராயத்தைத் திரட்டுவதற்கு முதலில் இந்தியாவுக்கு வந்திருக்கிறார்.

டாக்டர் ஷாரீருக்குத் தம்மாலான உதவியும் ஒத்தாசையும் செய்வதாகப் பண்டித நேரு இந்தியாவின் சார்பில் வாக்களித்துத் தீவிரமாகச் செயலிலும் ஈடுபட்டுள்ளார்.

• • •

படத்தில் டாக்டர் ஷாரீருக்குப் பக்கத்தில் இருப்பவர் அவருடைய அருமை மனைவி ஸ்ரீமதி ஷாரீர். அவர் ஒரு டச்சுக்காரி என்பதை அறியும்போது எல்லோருக்குமே வியப்பு உண்டாகும். டாக்டர் ஷாரீரைக் கல்யாணம் செய்து கொண்ட 'குற்ற'த்துக்காக டச்சு ஏகாதிபத்தியம் அவரை நாடு கடத்தி ஹாலந்துக்கு அனுப்பிற்று. பன்னிரண்டு வருஷங்களாக அவர்கள் ஒருவரை யொருவர் பார்க்கவே யில்லை. ஆசிய உறவு மகாநாட்டுக்காக டாக்டர் ஷாரீர் டில்லிக்கு வந்திருந்தபோது, ஸ்ரீமதி ஷாரீரும் டில்லிக்கு வந்து தம்முடைய கணவரைப் பார்த்து மகிழ்ந்துவிட்டு மீண்டும் ஹாலந்துக்குச் சென்றார்.

• • •

"எங்களுக்கு ஆயுதங்கள் இல்லை, பெரிய சேனை இல்லை. ஆனால் தர்மம் எங்கள் கட்சியிலே இருக்கிறது" என்கிறார் டாக்டர் ஷாரீர்.

தர்மம் அவர்கள் பக்கம் இருக்கும்போது யார் என்ன செய்ய முடியும்?

மயிலாப்பூர் கபாலீஸ்வரர் ஆலய கோபுர புனருத்தாரண நிதிக்காக



# ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

## உதவும் சங்கீதக் கச்சேரி

ஆஸ்தான வித்வான்

சங்கீதரத்ன மைசூர் டி. சௌடய்யா — பிடில்
கல்பாத்தி ராமனாதன் — மிருதங்கம்
ஆலங்குடி ராமச்சந்திரன் — கடம்

★

ஞாயிறு 3—8—1947 மாலை 5-30 மணிக்கு

## மயிலாப்பூர் பி. எஸ். ஹைஸ்கூலில்

★

சென்னை பிரதம மந்திரி ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் அவர்கள்
தலைமை வகிப்பார்கள்

டிக்கட்டுகள் : ரூ. 50/: 10/: 5/: 3/:

★

கீழ்க்கண்ட இடங்களில் டிக்கெட்டுகள் கிடைக்கும் :

1. திருப்பணி ஆபீஸ், கபாலீஸ்வரர் ஆலயம், மயிலாப்பூர்
2. கர்ப்பகவல்லி டாக்ஸி சர்வீஸ், 1, பிராடீஸ் ரோடு, மயிலாப்பூர்
3. டூரிஸ்ட்ஸ் ஹோம், ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில், எழும்பூர்
4. பாரத் கபே, மவுண்ட் ரோடு
5. ராமகிருஷ்ணா லஞ்ச் ஹோம், எஸ்பிளனேட்
6. ஸாம்ஸன் அண்டு கம்பெனி, பிராட்வே
7. ஸ்ரீ யுனைடெட் என்ஜினீரிங் கம்பெனி, பாண்டி பஜார், தி. நகர்

அ. பார்த்தசாரதி முதலியார், சுவாமிநாத குருக்கள் : நிர்வாகிகள்.

ஒலி பெருக்கி : திருச்சி ரேடியோ ஸேல்ஸ் & ஸர்விஸ்.




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 1

# என்ன சேதி?

## கனவு பலித்தது!

தேச பக்தர்களுடைய கனவும் வீரத் தியாகிகளுடைய லட்சியமும் பொது மக்களுடைய மனோரதமும் வீண்போகவில்லை.

இருபத்தேழு வருஷங்களுக்குப் பின்னால் அது பலித்திருக்கிறது. காங்கிரஸ் மூவர்ணக் கொடி ஆகஸ்ட் 15-ம் தேதியிலிருந்து இந்தப் பரந்த பாரத தேசம் முழுவதிலும் பட்டொளி வீசிப் பறக்கும்.

ஸ்ரீமதி சரோஜினி தேவி சொன்னது போல, இந்திய தேசத்துக்குச் சொந்தமாக ஒரு கொடி இல்லாதிருந்த ஒரு பெருங் குறை இதன் மூலம் நீங்குகிறது.

புனிதமான இந்த மூவர்ணக் கொடியின் கீழே நாம் எத்தனையோ போராட்டங்கள் நடத்தியிருக்கிறோம். ஆயிரக் கணக்கான தேசத் தொண்டர்கள் சொல்ல முடியாத தியாகங்களை யெல்லாம் செய்திருக்கிறார்கள். அது நம்முடைய தேச பக்திக்கும் தியாகத்துக்கும் ஒரு சின்னம்.

அந்நிய ஏகாதிபத்தியம் எத்தனையோ முறை கண்மூடித்தனமாக அதைப் பிடுங்கியிருக்கிறது, கிழித்திருக்கிறது, காலில் போட்டு மிதித்துத் துவைத்தும் இருக்கிறது. அதை வைத்திருப்பது கூட ஒரு குற்றமாகக் கருதப்பட்ட காலமும் உண்டு. அதே தேசியக் கொடி, வரும் ஆகஸ்ட் 15-ம் தேதிக்குப் பிறகு, எல்லா சர்க்கார் காரியாலயங்களிலும் பறக்கும், ஆழ்கடல்களிலும் பறக்கும், தூர தூர தேசங்களிலும் பறக்கும் என்பதை அறியும்போது நமக்கு உண்டாகும் சந்தோஷத்துக்கு அளவேயில்லை. தற்போது வைஸ்ராயாக இருக்கும் லார்ட் மௌண்ட்பாட்டன் கூட அந்தக் கொடியின் கீழே கவர்னர் ஜெனரல் உத்தியோகம் பார்ப்பார் என்பதை எண்ணும்போது நமக்கு உண்டாகும் மகிழ்ச்சிக்குக் கங்குகரையேயில்லை.

## சிறு மாறுதல்

புகழ்பெற்ற இந்த தேசியக் கொடியில், நம்முடைய தலைவர்கள் ஒரு சிறிய மாறுதல் மாத்திரம் செய்திருக்கிறார்கள். அதாவது, சர்க்காவுக்குப் பதில் ஒரு சக்கரம் இருக்கும். அதற்குக் காரணம் என்னவென்பதைப் பண்டித நேரு நன்றாக விளக்கியிருக்கிறார். கொடியின் ஒரு புறத்தில் காணப்படும் உருவம் அதே மாதிரி மறு பக்கத்திலும் காணப்பட வேண்டுமாம். இதற்குச் சர்க்கா அவ்வளவு பொருத்தமாக இல்லை; சக்கரமே பொருத்தமாக இருக்கும். இதைத் தவிர அந்தச் சக்கரத்தில் மற்றொரு விசேஷமும் இருக்கிறது. அது சாதாரண சக்கரம் அல்ல, அன்பையும் அறத்தையும் பூவுலகத்தில் பரப்ப முயன்ற அசோக மகா சக்கரவர்த்தியின் ராஜாங்கச் சின்னமாகும். நம்முடைய பாரத தேசத்தின் பண்டைய கலாசாரத்துக்கு இதைவிட வேறு சிறந்த சின்னம் என்ன கிடைக்க முடியும்?

## விழித்துக் கொள்வார்களா?

திருவாங்கூர் சமஸ்தானம் இந்திய யூனியனில் சேருவதென்று முடிவு செய்திருப்பது எல்லோருக்கும், முக்கியமாக, திருவாங்கூர் மக்களுக்கு ரொம்பவும் திருப்தி யளிக்கும். இந்தப் புத்திசாலித்தனமான முடிவை மகாராஜா கொஞ்ச காலத்துக்கு முன்பே செய்திருக்கலாம். அதன் மூலம், அனாவசியமாக இப்போது அந்த சமஸ்தானத்திற்குள் வளர்ந்திருக்கும் மனக் கசப்பையும் வீண் குழப்பத்தையும் போக்கியிருக்கலாம்.

திருவாங்கூர் சமஸ்தானம் இந்தமாதிரியாகத் தன்னுடைய கடுமையான பிடிவாதத்தைக் கைவிட்டு இந்திய யூனியனில்

சேர ஒப்புக் கொண்டதற்கு, லார்ட் மௌண்ட் பாட்டன் சென்ற வாரம் டில்லியில் நடத்திய மன்னர்கள் மகாநாடு ஒரு முக்கிய காரணமாயிருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

லார்ட் மௌண்ட் பாட்டன் மேற்படி மகாநாட்டிலே, சமஸ்தானங்கள் எதாவது ஒரு டொமினியனுடன் சேராமல் தனித்து நின்றால் அவைகளுக்கு எந்த வகை ஆபத்து ஏற்படும் என்பதை நன்றாக விளக்கியுள்ளார். பாதுகாப்பு, அயல் நாட்டு விவகாரம், போக்குவரத்து இந்த மூன்று விஷயங்களில் கொஞ்சம் விட்டுக் கொடுப்பதினாலே அவைகளின் சுதந்திரத்துக்குப் பங்கம் எதுவும் விளைந்து விடாது என்பதையும் அவர் ரொம்பத் தெளிவாக விளக்கியிருக்கிறார். இதை யெல்லாம் சொல்லி விட்டு, இறுதியாக அவர் ஒரு எச்சரிக்கையும் செய்திருக்கிறார். "ஆகஸ்ட் 15-ம் தேதிக்குப் பிறகு தனித்து வாழ விரும்பும் சமஸ்தானங்களைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்" என்று சொல்லியிருக்கிறார்!

இந்திய சமஸ்தான மன்னர்கள், இதுவரை கடவுளைக் காட்டிலும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத் தெய்வத்தைத்தான் நம்பி வந்தனர். அந்தத் தெய்வமே அவர்களைக் கைவிட்டு விட்டு ஓடும்போது அவர்கள் கண்ணைத் திறந்து விழித்துக் கொள்ள மாட்டார்களா என்ன, பார்ப்போம்!

## யார்மீது குற்றம்?

கொஞ்ச காலமாக சர் ஸி.பி. ராமஸ்வாமி ஐயருக்கும் திருவாங்கூர் சமஸ்தானத்துக்கும் அடுத்தபடியாகச் சென்னைப் பத்திரிகைகளிலே பிரபல ஸ்தானம் வகித்து வருவது பர்மா பீன்ஸ் என்ற துலுக்காணிப் பயறு (துலுக்காணிப் பயறு என்ற பர்மா பீன்ஸ் என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம்) ஆகும்.

அது இந்திய யூனியனில் சேரமாட்டேன் என்பதாக தாவா எதுவும் செய்யவில்லை. ஆனால், அதைச் சாப்பிட்டவர்களுக்குத் தான் ஒத்துக்கொள்ள வில்லை.

பர்மா பீன்ஸைச் சாப்பிட்டு நாள் தோறும் சிலர் செத்துப் போவதாகப் பத்திரிகைகளில் செய்தி வருவது எல்லோருக்கும் தெரிந்திருக்கும்.

இது சர்க்காருடைய கவனத்தையும் கவர்ந்தது. அவர்கள் மேற்படி மொச்சையில் விஷம் இருக்கிறதா, இல்லை என்பதை ஆராய்ந்து சொல்லும்படியாக கிண்டியில் உள்ள சர்க்கார் பரிசோதகரைக் கேட்டார்கள். பரிசோதகர் அதை ஆராய்ந்த பிறகு, பர்மா மொச்சையில் விஷம் இருப்பது உண்மையே என்றும் அதைச் சாப்பிட்டால் வாந்தி, ஜன்னி, பக்ஷவாதம் முதலிய வியாதிகள் ஏற்படும் என்றும் தெளிவாகச் சொல்லி விட்டார்.

ஆகையால், இந்த மொச்சை விற்கப்படுவதை நிறுத்தி வைக்கும்படியாகச் சென்னை சர்க்கார் வியாபாரிகளுக்கு உத்தரவிட்டிருக்கிறார்கள்.

அந்தச் சமயத்திலே பர்மாவிலிருந்து வந்திருக்கும் ஒரு செய்தி ரசமாக இருக்கிறது. "யார் சொன்னது, அந்தப் பீன்ஸில் விஷம் இருக்கிறது என்று! இந்தியர்களுடைய உடம்பில்தான் ஏதாவது கோளாறு இருக்க வேண்டும்! எங்களுடைய மொச்சையில் குற்றமே இல்லை!" என்கிறார்களாம் பர்மா சர்க்கார்.

பேஷ், நன்றா யிருக்கிறது!

## வாலிபரானார்!

மதுரை ஜில்லாவிலே 'மட்டப் பாறை வெங்கட்டராமய்யர்' என்ற பெயரைக் கேட்டதும், அழுத பிள்ளை சிரித்துக் கொண்டே "வந்தே மாதரம், மகாத்மா காந்திக்கு ஜே!" என்று சொல்லும். ஸ்ரீ ஐயர் அவர்கள் மதுரை ஜில்லாவிலே அவ்வளவு தூரம் காங்கிரஸ் பக்தியும் தேச பக்தியும் உண்டாக்குவதற்காக அரும்பாடு பட்ட ஆதிகாலக் காங்கிரஸ் தலைவர்களில் ஒருவர். சமீபத்தில், அவருடைய அறுபதாவது ஆண்டு விழா அவருடைய பிறந்த ஊரான மட்டப்பாறையில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டதை அறிந்து மகிழ்ச்சி யடைகிறோம்.

சிலரை, தேச சேவையிலே தலை நரைத்துப் போனதாகச் சொல்லுகிறார்கள் அல்லவா? இது ஐயர் அவர்கள் விஷயத்தில் ரொம்பப் பொருந்தும். ஆனால் ஐயர் அவர்களுடைய தலை நரைத்த போதிலும், அவருடைய உள்ளம் நரைக்கவில்லை. இதற்கு உதாரணமாக, அவர் தமது சஷ்டியப்த பூர்த்தியின் போது, தம்முடைய மீசையை முறுக்கி விட்டுக் கொண்டே, "இன்று முதல் நான் வாலிபனாகிவிட்டேன்!" என்று சொன்னதே போதும். ஸ்ரீ ஐயர் அவர்கள் இன்னும் பல வருஷங்கள் வாழ்ந்து சுதந்திர இந்தியாவுக்குத் தொண்டு புரிவாரென்று எதிர்பார்க்கிறோம்.

# முதலைக் கண்ணீர்!


"நான் சமாதானத்தையே நாடுகிறேன். ஆனால் இந்த துஷ்டர்களான இந்தோனேஷ்யர்களைப் பாருங்கள். எங்களை இப்படியெல்லாம் செய்யும்படி இழுத்து விட்டிருக்கிறார்கள்"







சம்பளம் போதவில்லை என்பதற்காக பாக்கிஸ்தானில் சிலர் கவர்னர் பதவிகளை ஏற்க மறுத்து விட்டார்களாம்!

## ராஜ தந்திரமும் வியாபார தந்திரமும்






# யாருக்கு லாபம்?

சுதந்திர விழா நெருங்கிவிட்டது!

இந்தியாவில் பிரிட்டிஷ் கோட்டைகளாக இருந்துவந்த சர்க்கார் காரியாலயங்கள், இருநூறு வருஷங்களாகப் படிந்திருந்த புழுதி யெல்லாம் நீங்கிப் புனித மடையப் போகின்றன.

அவற்றின் புனிதத் தன்மையை உலகமெங்கும் அறிவிப்பது போன்று, ஆகாயமளாவ நம் தேசியக் கொடி கம்பீரமாகப் பறக்கும் நாள் மிகவும் சமீபித்து விட்டது!

'ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம் என்று தேசம் முழுதும் குதூகலத்துடன் குதிக்க வேண்டிய காலம் அதோ வந்து கொண்டிருக்கிறது!

அது நம்மிடம் வந்து சேர இன்னும் இரண்டு வாரங்கள்கூட இல்லை!

*     *     *

ஒரு தேசத்தின் சரித்திரத்தில்,-ஒரு மனிதனின் வாழ்வில் இதைக் காட்டிலும் ஆனந்த பரவசத்தை யுண்டு பண்ணக்கூடிய சம்பவம் வேறென்ன இருக்க முடியும்?

அப்படி யிருந்தும், ''நாம் குதூகலம் அடைவதற்கு என்ன இருக்கிறது?'' என்று வருந்துகிறார் நமது மாபெருந் தலைவரான மகாத்மா காந்தி.

'''சுயராஜ்யம் கிடைத்தாலன்றி சபர்மதிக்குத் திரும்பிவர மாட்டேன்' என்று தாங்கள் சபதம் செய்திருந்தீர்கள். இப்போது சுயராஜ்யம் கிடைத்து விட்டது. இனி தாங்கள் சபர்மதிக்குத் திரும்பி வந்துவிடலாம்'' என காந்திஜியின் பழைய நண்பரான டாக்டர் ஹரிப் பிரசாத் தேசாய் அனுப்பியிருந்த அழைப்புக்கு மகாத்மா கூறியுள்ள பதில், அந்த மகானின் மனத் துடிப்பை நன்கு பிரதிபலிக்கின்றது.

அதாவது, ''என் சம்பந்தப்பட்ட வரையில் சபர்மதி வெகு தொலைவில் இருக்கிறது; நவகாளிதான் சமீபத்தில் இருக்கிறது'' என்று சுருக்கமாகக் காந்திஜி பதில் அளித்திருக்கிறார்.

மகாத்மாவின் மனோ வேதனையையும் பாரத நாட்டின் பரிதாப நிலையையும் எடுத்துக் காட்டுவதற்கு, ஆழ்ந்த சோகமும் கருத்தும் ததும்பும் அந்த ஒரு சில வார்த்தைகளே போதும்.

நவகாளியில் இன்னும் படுகொலைகள் நடந்து வரும்போது, சபர்மதியைப் பற்றிக் காந்திஜி நினைப்பதற்கே இல்லை என்பதுதான் மேற்படி உருக்கமான மொழிகளின் கருத்தாகும்.

முன்னர் இந்தியர்களிடையே ஒற்றுமை குலைந்ததால்தான் இந்தியா சுதந்திரத்தை இழக்க நேர்ந்தது.

அப்படி யிருக்க, மகத்தான போராட்டங்களுக்கும் கஷ்ட நஷ்டங்களுக்கும் பின் அன்னியர் ஆதிக்கம் ஒழிந்து மீண்டும் சுதந்திரம் கிடைத்திருக்கிறது.

இந்நிலைமையில், மறுபடியும் இந்திய சமுதாயத்தில் ஒற்றுமையின்மையாகிற புல்லுருவி படர இடம் கொடுப்பது சகிக்க முடியாத விஷயமாகும். அவ்வாறு இடம் கொடுப்பதால் ஏற்படக் கூடிய விளைவுகளின் பயங்கரத்தை வர்ணிப்பதென்பது முடியாத காரியம்.

மகாத்மாவின் மனம் நைந்து உருகுவதற்குக் காரணம் அதுதான்.

*     *     *

பாகிஸ்தானிலுள்ள சிறுபான்மையோரின் கதி என்னவென்பது பற்றி நாடெங்கும் மிகுந்த கலக்கம் ஏற்பட்டிருக்கிறது.

இந்தியாவில் முஸ்லிம்கள் சிறுபான்மையோராக இருப்பதால், அவர்களை ஹிந்துக்கள் விழுங்கிவிடுவார்கள் என்றும், எனவே முஸ்லிம்களுக்குத் தனி ராஜ்யம் வேண்டும் எனவும் ஜனாப் ஜின்னா கூறி வந்தார்.

ஆனால், அதே ஜின்னா தமது ராஜ்யமான பாகிஸ்தானில் சிறுபான்மையோருக்கு என்ன நீதி வழங்கப் போகிறார் என்பது பற்றியே இப்போது கலக்கம் ஏற்பட்டிருக்கிறது.

பாக்கிஸ்தானில் முஸ்லிமைப் போல் முஸ்லிம் அல்லாதாருக்கும் சகல உரிமைகளும் உண்டு என்று சமீபத்தில் ஜனப் ஜின்னா உறுதி கூறினார் என்பது உண்மைதான்.

ஆனால், அவரது உறுதிமொழி எவ்வளவு தூரம் செய்கையில் நிறைவேறப்போகிறது என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும் என மகாத்மா காந்தியே சந்தேகப்படுகிறாரென்றால், அவ்விஷயமாக வியாக்கியானம் எதுவும் தேவையில்லை!

ஏற்கெனவே, வகுப்புக் கலவரத்தை ஒடுக்கும் விஷயமாக ஜனப் ஜின்னா விடுத்த வேண்டுகோளினால் யாதொரு பலனும் கிடைக்காததால்தான் அவரது வார்த்தைகளில் நம்பிக்கை ஏற்படுவது கஷ்டமாக இருக்கிறது.

முன்னர் அவரது வேண்டுகோள் நிறைவேறியிருக்குமாயின், இப்போது மகாத்மா காந்தி நவகாளிக்குச் செல்லத் திட்டம் போடவேண்டிய அவசியமே ஏற்பட்டிராது.

* * *

எனினும், ஆகஸ்ட் மாதம் 15-ந் தேதிக்குள் இந்தியாவில் நிலைமை அபிவிருத்தியடைவதற்கான அறிகுறிகள் இருந்து வருவது தலைவர்களுக்கும் தேச மக்களுக்கும் ஓரளவு ஆறுதலை அளிக்கக்கூடிய விஷயமேயாகும்.

அதாவது, சமீபத்தில் புது டில்லியில் பிரிவினைச் சபை விடுத்த அறிக்கை சகலருக்கும் நம்பிக்கையை உண்டு பண்ணக் கூடியதாக இருக்கிறது.

அச் சபையில் பாக்கிஸ்தான் சர்க்கார் பிரதிநிதிகளும், இந்திய சர்க்கார் பிரதிநிதிகளும் இருக்கிறார்கள்.

"பாக்கிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் பூரண அதிகாரம் கிடைத்த பின், அதாவது ஆகஸ்ட் மாதம் 15-ந் தேதிக்குப் பிறகு, இந்தியாவிலும் பாக்கிஸ்தானிலும் உள்ள சிறுபான்மையோரின் நியாயமான சகல உரிமைகளும் பாதுகாக்கப்படும்.

"மேற்படி இரண்டு சர்க்கார்களும் தங்கள் தங்கள் எல்லைகளுக்குட்பட்ட சகல ஜனங்களுக்கும் பேச்சு, மதம், பாஷை, கலாசாரம் முதலிய எல்லா விஷயங்களையொட்டியும் சுதந்திரம் அளிப்பதாக உறுதி கூறுகின்றனர்.

"மற்றும், மேற்படி இரு சர்க்கார்களும் தங்கள் தங்கள் எல்லைகளில் எவ்வித பலாத்காரத்துக்கும் இடம் கொடுப்பதில்லை யென்று உறுதி பூண்டிருக்கிறார்கள்.

"எல்லை நிர்ணயக் கமிஷனின் முடிவு எப்படியிருப்பினும், அதை ஆட்சேபனையின்றி ஏற்றுக்கொள்ள இரு சர்க்கார்களும் இசைந்துள்ளனர்."

மேற்படி அறிக்கையில் கண்டுள்ள வாசகங்கள் செய்கையில் நிறைவேறுமாயின், எதிர்காலத்தைப் பற்றித் தலைவர்களோ, தேசமக்களோ சிறிதும் கவலைப்பட வேண்டிய அவசியமே இராது.

அச்சபையில் காங்கிரஸ் தலைவர்களும், முஸ்லீம் லீக் தலைவர்களும், சீக்கியர் தலைவர்களும் இருப்பதால், அவர்கள் இந்தியாவின் சார்பில் உலகத்துக்கே மேற் கூறியவாறு உறுதிமொழி கூறியிருக்கிறார்கள் என்றே வைத்துக் கொள்ள வேண்டும்.

* * *

சிறுபான்மையோருக்கு இன்னல் இழைப்பதால் யாருக்கு என்ன லாபம்?

ஒருவேளை, சிறுபான்மையோரைச் சித்திரவதை செய்வதன் மூலம் குண்டர்கள் கொள்ளை வெறி, கொடிய வஞ்சம், கொலைப் பாதகம் போன்ற இழிவான மிருக உணர்ச்சிகளைத் திருப்தி செய்து கொள்ளலாம். எனினும், அத்தகைய கொடுமைகளையும் நிரபராதிகளின் உதிரத்தையும் அஸ்திவாரமாகக் கொண்டு அமையும் அரசாங்கம் எவ்வளவு காலம் நீடிக்க முடியும்?

அத்தகைய அரசாங்கம் உலகத்தின் நன்மதிப்பை எவ்வாறு பெற முடியும்?

சிந்துவில் சிறுபான்மையோருக்கு அடுக்கடுக்காக இழைக்கப்பட்ட அநீதிகள் காரணமாக, அங்கிருந்து ஏராளமான ஹிந்துக்கள் வெளியேறி வருவதுடன், கோடிக் கணக்கான தொகையும் வெளியேறிக் கொண்டிருக்கிறது என்று பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

போதாக்குறைக்கு, சிந்து சர்க்கார் பல ஹிந்துக்களின் சொத்துக்களையும் கட்டுப்படுத்தி விட்டார்கள்.

பாக்கிஸ்தான் தலைமைக் காரியாலயத்தை அமைக்க அவைகள் தேவையாக இருக்கின்றன என்பதே சிந்து சர்க்கார் கூறும் சமாதானமாகும்.

வங்காளம், பாஞ்சாலம் இவ்விரு மாகாணங்களையும் சேர்ந்த பல விடங்களி லிருந்துங்கூட ஜனங்கள் பதினாயிரக் கணக்கில் வெளியேறி வருகிறார்களாம்.

பாஞ்சாலத்திலுள்ள பல முக்கிய பாங்கிகள் பாக்கிஸ்தான் பிரதேசத்தி லிருந்து வெளியேறி விட்டன.

தங்களுடைய விபரீதமான செய்கை களால் அத்தகைய நிலைமையைச் சிருஷ்டித்துள்ள முஸ்லிம் லீக்கர்கள், அவ்வாறாக ஏராளமான ஜனங்களும், மூலதனமும் வெளியேறுவது பாக்கிஸ் தான் சர்க்காரின் நாணயத்துக்கும், கௌரவத்துக்கும், பொருளாதார சுபிட்சத்துக்கும் ஏற்றதல்ல வென் பதை உணராதது ஆச்சரியமாக இருக்கிறது.

* * *

முஸ்லிம் லீக்கர்களின் பிரசார ஆர்ப்பாட்டங்கள் ஒருபுற மிருக் கட்டும்.

பிரிட்டிஷாரின் 1946 மே மாத அறிக்கை வெளியானதிலிருந்து லீக் கர்கள் தங்களுடைய லாப நஷ்டக் கணக்கைச் சிறிது ஆராய்ந்து பார்ப் பார்களாயின் அவர்கள் குதூகலம் அடைவதோ, மேற்கொண்டு சிறு பான்மையோரைத் துன்பத்துக்கு ஆளாக்குவதோ அர்த்தமற்ற செய்கை யென்பதும் லாபமற்ற செய்கை யென்பதும் நன்கு புலனாகும்.

சென்ற வருஷம் வெளியான பிரிட் டிஷ் மந்திரிகள் கோஷ்டி அறிக்கை யின்படி அஸ்ஸாமில் லீக்கர்களின் செல்வாக்கு அபரிமிதமாக இருக்க இடமளிக்கப்பட் டிருந்தது.

கல்கத்தாவும் லீக்கர்களின் கோட்டையாக நீடித்து வருவதற்கு வசதி யளிக்கப் பட்டிருந்தது.

அவ்வறிக்கையின்படி பாஞ்சாலம் முழுவதிலும் லீக்கர்களின் ஏதேச்சாதி காரம் ஏற்பட்டிருக்கும்.

இந்தியாவைப் பிளக்கக் கூடாது என்பதுதான் பிரிட்டிஷ் மந்திரிகள் கோஷ்டியின் நோக்கமே யன்றி, மற்றப்படி முஸ்லிம் லீக்கர்களுக்குப் பல மாகாணங்களிலும் அபரிமித மான செல்வாக்கு ஏற்படுவதற்கு வசதி யளிக்கும் கைங்கரியத்தில் அக் கோஷ்டி சிறிதும் பின் வாங்கவில்லை.

ஆனால், லீக்கர்களுடைய நேர் நடவடிக்கையின் விளைவாக ஏற்பட்ட 1947 ஜூன் மாத அறிக்கையின்படி அவர்கள் அஸ்ஸாமை இழக்க நேர்ந்தது.

பலபல வருஷங்களாக லீக்கர்களின் கோட்டையாக இருந்து வந்த கல்கத்தாவையும் அவர்கள் அனுப விக்க முடியாத நிலைமை ஏற்பட் டிருக்கிறது.

பாஞ்சால, வங்காளப் பிரிவினையும் நேர் நடவடிக்கையின் நேரடியான பலன் என்பதைச் சகலரும் அறிவர்.

வடமேற்கு எல்லைப்புற மாகாணத் தில் தங்களுக்கு அபரிமிதமாக ஆதரவு இருப்பதாக லீக்கர்கள் பிரமாதமாகப் பிரசாரம் செய்து வந்தார்கள்.

டாக்டர் கான்சாகிப் மந்திரி சபை பொது ஜனங்களின் நம்பிக்கையை இழந்து விட்ட தென்றும், அச்சபை மேற்கொண்டு அதிகாரத்தி லிருப்பது 'ஜனநாயக'த்துக்கு முரணாகும் என் றும் தர்க்கம் செய்தார்கள்.

சமீபத்தில் அங்கு எடுக்கப்பட்ட பொதுஜன வோட்டுக்களின் முடிவு, முஸ்லிம் லீக்கர்களையே தூக்கி வாரிப் போட்டிருக்கிறது.

அதாவது, முஸ்லிம் மாகாணமான அங்குகூட பாக்கிஸ்தானுக்கு ஆதர வாக ஐம்பத்தொன்று சத விகிதம்கூட வோட்டுகள் கிடைக்கவில்லை!

அங்கு பெரும்பான்மையான வோட் டுகள் கிடைப்பதற்காக ஜனாப் ஜின்னா வானொலி மூலம் பிரசங்கம் செய்தார்.

கவர்னர் காரோ, பிரிட்டிஷ் ஏஜண்டுகள் முதலியோரின் கைங் கரியம் காரணமாக, ஏற்கனவே அங்கு லீக்குக்குச் சாதகமாக நிலைமை பக்குவப் படுத்தப்பட் டிருந்தது.

இடைக்கால மந்திரி சபையைச் சேர்ந்த மூன்று முஸ்லிம் லீக் பிர முகர்கள் அங்கு நேரில் சென்று நட புடல் செய்தார்கள்.

மற்றும் பஞ்சாப் முதலிய விடங்களி லிருந்து லீக் தொண்டர்களும் சென்று தலைகீழாக நின்று பார்த்தார்கள்.

அங்கு வோட்டெடுப்பதில் காங் கிரஸ் கட்சி கலந்து கொள்ளாததால், லீக்கர்களின் பாடு கொண்டாட்ட மாகியது.

அப்படி யெல்லாம் இருந்துங்கூட அவர்கள் பாதி வோட்டுக்களே பெற முடிந்ததெனில், அம் மாகாணத்தில்

கான் அப்துல் கபார்கான், டாக்டர் கான்சாகிப், முதலிய தலைவர்களின் இணையற்ற செல்வாக்கை அறிந்து கொள்ளலாம்.

அவர்களுடைய பெருமையை இப்போதாவது லீக்கர்களும் அறிந்து கொண்டிருப்பார்கள்.

அங்கு பொதுஜன வோட்டெடுக்கும் போது மேற்படி தலைவர்களும் கலந்து கொண்டிருந்தால், முடிவு எவ்வாறு இருக்கும் என்பது பற்றிச் சந்தேகம் எழுவதற்கில்லை.

பொதுஜன வோட்டுகள் கணக்கெடுக்கப் பட்டபோது அங்கு நிகழ்ந்த ஆள் மாறாட்டங்களையும் சூழ்ச்சிகளையும் எல்லை மாகாண மந்திரிகள் அம்பலப்படுத்தி யிருக்கிறார்கள்.

எனவே, பாக்கிஸ்தானில் வடமேற்கு எல்லைப்புற மாகாணப் பிரச்னை லீக்கர்களுக்குப் பெரும் தலை வலியாக இருந்து வரப் போவது நிச்சயம்.

இந்நிலைமையில் லீக்கர்கள் சிறுபான்மையோரையும் தொடர்ந்து துன்பத்திற்குள்ளாக்குவதன் மூலம் பாக்கிஸ்தானுக்கு என்ன உருவான லாபம் ஏற்படப் போகிறது?

எனவே, முன்னர் ஜனாப் ஜின்னாவின் வேண்டுகோளுக்கு நேர்ந்த கதி, மேற்படி பிரிவினைச் சபையின் உறுதிமொழிக்கும் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதே நமது கவலையாகும்.

• • •

சமீபத்தில் அரசியல் நிர்ணய மகா சபையில் பேசிய முஸ்லிம் லீக் பிரதிநிதி, இந்திய தேசியக் கொடியைத் தாங்கள் இருதய பூர்வமாக வணங்குவதாகவும், இந்திய அரசாங்கத்தினிடம் தாங்கள் பூரண விசுவாசத்துடனிருப்பதாகவும் உறுதி கூறினர்.

இந்தியா சம்பந்தப்பட்ட வரையில், அது முஸ்லிம் லீகின் கொள்கையாக இருக்கும் பட்சத்தில் அது மிகவும் போற்றத் தக்கதாகும்.

அது போலவே பாக்கிஸ்தானிலுள்ள சிறுபான்மையோரும் பாக்கிஸ்தான் சர்க்காரிடம் விசுவாசத்துடன் நடந்து கொள்ள வேண்டும் என்று மகாத்மா காந்தி புத்திமதி கூறியுள்ளார்.

எனினும் தங்களுடைய உயிர், உடைமை முதலியவற்றிற்குப் பாதுகாப்பு அளிக்காத ஒரு சர்க்காரிடம் யார்தான் விசுவாசம் காட்ட முடியும்?

இந்த உண்மையை பாக்கிஸ்தான் தலைவர்கள் உணர்ந்து, வங்காளம், பாஞ்சாலம், சிந்து முதலிய இடங்களில் நடந்து வரும் அட்டூழியங்களை நிறுத்த உடனே முற்படுவார்களாக.

பூஞ்சோலை
சென்னை
கையெழுத்துப்பிரதி

13-14 செகண்டு லேன் பீச், சென்னை 1.

23-7-47.

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு,

கவிச்சக்கரவர்த்தி கம்பன் தோன்றி கவி மழை பொழிந்த தமிழ்நாட்டில், வள்ளுவன் தன்னை உலகுக்கீந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாட்டில், நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தை அருளிய இளங்கோ உதித்த தமிழ்நாட்டில், தேனிலுமினிய தீந்தமிழ் அப்போது உலகை ஆட்சி புரிந்தது. அன்று அரசாட்சி செலுத்திய மன்னர் மன்னர்களெல்லாம் அதனை வணங்கினார்கள்; அதை வளர்த்த தெய்வ புலவர்களைக் கௌரவித்தார்கள்

அன்னிய ஆதிக்கத்தால் பழைய தமிழின் மணம் திரிந்து இன்றியது சுடர்விட்டுப் பிரகாசித்த தமிழ் சற்று பின்வாங்க நேர்ந்தது. அன்று தோன்றினார், அமரகவி பாரதியார். வெற்றிச் சங்கு ஊதினார். வீரகர்ஜனை புரிந்தார். தூங்கிய தமிழனை தூக்கி நிறுத்தினார். சுதந்திர உணர்ச்சியை ஊட்டினார்.

ஆயினும் அவர் சுதந்திர நாட்டில் வாழக்கொடுத்து வைக்கவில்லை. அவர் கண்ட கனவுகளை நனவாக்கும் பெரும் பொறுப்பை நம்மீது சுமத்தி அவர் மறைந்தார். விழித்தெழுந்த நாம் பொறுப்பை உணர்ந்தோம். அவரது புகழ் 'எட்டுத்திக்கும் எட்டக் கொட்டு முரசே' என்பதை நிரூபிக்க வேண்டியது நம் கடமை

தங்களது பெரும் முயற்சியால் தமிழ்மக்கள் அன்பால் அள்ளிக் கொடுத்த பொருளைக் கொண்டு எட்டயபுரத்தில் வானளாவ வளர்கிறது, பாரதி மண்டபம். அன்பு நிதி சேர்த்தபோது அதில் தொண்டு செய்யும் பாக்கியத்தை 'பூஞ்சோலை' அடையவில்லை ஆம்! அப்போது பூஞ்சோலை பிறக்கவில்லை. அக்குறையை நிவர்த்தித்துக் கொள்ளும் வண்ணம் மறு முறையும் தாங்கள் நிதிசேகரிக்கத் தொடங்கியுள்ளதை அறிய பெரிதும் மகிழ்வடைகிறோம். ஆஹா! பூஞ்சோலையின் பாக்கியமே பாக்கியம்!

இதைத் தொடர்ந்து வருகிறது, அன்புக் காணிக்கையின் இரண்டாவது ஜாபிதாவும் அதை அளித்த அன்பர்களின் பெயர்களும். மேலும் [illegible] பூஞ்சோலை தொடர்கிறது என்று தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளோம்.

வளர்க பாரதி மண்டபம்,
ஓங்குக பாரதி நாமம்.

பூஞ்சோலைப் பதிப்பகம்

[illegible signature]

# கண் திறந்தது!

கு. கு.

தஞ்சை, 16—3—44

ன் மனம் நிறைந்த குமுதம்,

உன் அன்னையின் அரவணைப்பிலும், ன் முகத் தோழியரின் இன்பப் பிணைப்பி ம் நினைந்துக் கிடக்கும் உனக்கு, உன் ஏழை'க் கணவனைப் பற்றி நினைக்கக்கூட ரமில்லை போலும்! தொடர்ந்து எழுதிய ன் கடிதங்களுக்கு ஒரு வரிகூடப் பதில் ழுத அவகாசமில்லையா? மனந்தான் ல்லையா?

வாரம் இரண்டு ஆகிவிட்டது - பதினான்கு ட்கள்!

வீடு வெறிச்சென்று கிடக்கிறது. ாழ்க்கை சூன்யமாகி விட்டது. லீவும் டைக்கவில்லை. இல்லாவிட்டால் பறந் தோடி வந்திருப்பேன்.

உன் சம்பங்கி அரும்பு வைத்துவிட்டது. ராஜா பூத்துக் குலுங்குகிறது. ஆனால் ன் குமுதம்......? சீக்கிரம் வா!

என்றும் உன்னுடைய,

சுந்தரவதனம்.

* * *

தஞ்சை, 19—3—44

ன் அன்பே,

இன்று வரையில் ஏமாற்றந்தான். இதை னைத்தால் என் வாழ்க்கையே ஏமாற்ற கி விடுமோ என்ற பயத்தின் நிழல் ஞ்சத்தில் லேசாகப் பரவுகிறது. ஆனால், ன்ன பைத்தியக்காரத்தனம்! நீ உன்ன வும் நான் ஏன் ஏமாற்றப்பட வேண்டும்? றேனும்......நாம் என்றும் வாழ்வோம். ருவருமாக, இன்பமாக, இனிதாக!

கடந்த இரண்டு நாட்களாக உடம்பு ரியில்லை. நீ நாளைக்கும் வராவிட்டால் ன் ஆஸ்பத்திரியில்தான் அனாதையாகப் பாய்ப் படுத்துக் கொள்ள வேண்டும்.

உன் அன்புள்ள,

சுந்தரவதனம்.

புத்தூர், 21—3—44

திரு சுந்தரவதனத்துக்கு,

என் மகள் குமுதத்திற்கு நீ எழுதிய கடிதங்களைப் பார்த்தேன். உனக்குப் பதில் எழுதக் கூடாதென்று நான் எச்சரித்ததாலேயே அவள் உனக்கு எழுதவில்லை. இனியும் எழுதமாட்டாள். அதுமட்டுமல்ல; அவள் உன்னிடம் வரவும் மாட்டாள். மனைவியாக வாழ்க்கை நடத்தவும் மாட்டாள். இதையெல்லாம் சொல்ல வருத்தமாகத்தானிருக்கிறது. அதனால் தான் அவளை அழைக்க வந்தபோதே நேரில் உன்னிடம் இந்த முடிவைத் தெரிவிக்கவில்லை. உண்மை கசப்பாக இருந்தாலும் தவிர்க்க முடியாததுதானே!

விஷயம் இதுதான்: குமுதம் இங்கே வருவதற்குச் சில தினங்களுக்கு முன்பாக, உன் பூர்வீகக் கிராமத்திலிருந்து ஒரு நண்பர் தற்செயலாக வந்தார். குமுதத்தை உனக்குக் கல்யாணம் செய்வித்த செய்தியைக் கேட்டதும் மிகவும் வருத்தமடைந்தவராய் உங்கள் குடும்பத்தைப் பற்றிய விவரங்களை வெளியிட்டார். நீங்கள் என்னை நம்பும்படி செய்தது போல உன் தந்தை இறக்கவில்லையென்றும், உன் தாயாரின் நடத்தையில் வெறுப்படைந்து சந்நியாசியாகி நாடோடியாகி விட்டாரென்றும், உங்கள் குடும்பம் ஊராரால் பஹிஷ்கரிக்கப்பட்டதென்றும் அவர் சொல்லக் கேட்டு மனமுடைந்தேன். எனினும் நடந்த விஷயங்களுக்கு உன்னைப் பொறுப்பாளியாக்கவில்லை. நீ குற்றமற்றவன்தான். ஆனால் என்னைப் போல் கௌரவமானவர்கள் உங்களுடன் சம்பந்தம் வைத்துக் கொள்வதென்பது முடியுமா? உன்னையும் உன் படிப்பையும் மட்டுமே சிறப்பாகக் கவனித்து, உனக்குக் குமுதத்தை மணம் செய்வித்தது என் தவறுதான். ஒரு தவறு இன்னொரு தவறைத் திருத்திவிடாது. இன்று எல்லாம் தெரிந்தபின், என் மகள் உங்கள் குடும்பத்தில் வாழ்வதைப் பார்த்துக் கொண்

டிருக்க என் மனம் தாளாது. ஆகவே வீணாக அவளுக்கு இனி எழுதாதே. அவள் என் மகள்; என்றும் என் மகளாகவே இருப்பாள்!

இது விஷயமாகக் கோர்ட்டு நடவடிக்கைகள் எதுவுமே தேவையில்லை என்பது என் எண்ணம். அவள் ஜீவனத்திற்காக உன்னிடமிருந்து ஒன்றும் எதிர்பார்க்க மாட்டாள். கடவுள் அது விஷயத்தில் எனக்கு ஒரு குறையும் வைக்கவில்லை.

இப்படிக்கு,
அருணாசலம்.

* * *

தஞ்சை, 23—3—44

என் அன்புள்ள குமுதம்,

என் இதயத்தை அதிர வைத்து, என் இன்ப வாழ்விற்கும் உலை வைத்து விட்ட உன் அருமைத் தந்தையின் கடிதம் கிடைக்கப் பெற்றேன்.

ஆழ்ந்த அறிவும், முதிர்ந்த அனுபவ ஞானமும் வாய்க்கப்பெற்ற உன் தகப்பனார், ஒரு கெட்ட குடும்பத்திலிருந்து உன்னை மீட்டுப் பரிசுத்தப் படுத்தி விட்டதாகப் பெருமைப்பட்டுக் கொண்டாலும், உன் வாழ்க்கையின் பிற்கால விளைவுகளைப் பற்றிச் சிந்திக்க வில்லையா?

என் பெற்றோர் விஷயமாக நாம் வெட்கப்பட வேண்டியது எதுவுமில்லை. சில வருடங்களுக்கு முன் என் தந்தைக்கு வியாபாரத்தில் திடீரென்று பிரமாதமான நஷ்டம் ஏற்பட்டது. இன்னது செய்வதென்று அறியாதவராய் மனம் உடைந்து, யாரிடமும் சொல்லாமல் திடீரென்று வீட்டை விட்டு மறைந்து விட்டார். ஊரெல்லாம் பலவித வதந்திகளும் கேவலமான புரளிகளும் தாராளமாக உலவின. ஆற்றோடு போகிறவனைக் கைகொடுத்து உதவ ஒருவரும் முன்வரா விட்டாலும், அவன் தலையில் ஆளுக்கொரு கல்லை விட்டெறிய யாரும் தயங்கமாட்டார்கள். இது உலக இயல்பு. பிறகு என் மாமா வந்திருந்து, தன் பணத்தையும் செல்வாக்கையும் தாராளமாக உபயோகித்து நிலைமையைச் சமாளித்தார். தந்தையின் பிரிவும், குடும்ப நிலைமையும் ஊர் புரளிகளுமே என் தாயாருக்கு எமனாக வந்தன. தாயார் இறந்ததும் என் மாமாவின் ஆதரவிலே நான் இருந்து வந்தேன். தந்தை சந்நியாசியாகி விடவில்லை. அன்று முதல் இன்னமும் கூடச் சென்னையில்தான் தமது நண்பர் ஒருவருடன் கூட்டாக வியாபாரம் செய் வருகிறார். கடன் தொல்லைகள் தீர்ந் விட்டாலும் என் தாயின் மரணமும் ஊ ரின் அவமதிப்பும் அவருக்குத் தன் சொந் ஊருக்குத் திரும்பும் ஆவலையே அகற் விட்டன. எனினும் அடுத்த மாதத்தி அவர் நம்மிடம் வருவதாகத்தானிருந்தா இதற்கிடையே இந்தக் குழப்பங்கள் ஏ பட்டு விட்டன.

நிற்க, நீ என் மனைவி யென்பதையு என் வாழ்க்கையோடு பிணைக்கப்பட்டவ என் அன்பிற்குப் பாத்திரமானவள் என் பதையும் உன் பெற்றோர் மறந்துவிட்ட லும் நீ மறக்க மாட்டாய்; உன் பெண்ணு ள்ளம் மறக்காது. ஆகவே ஒவ்வொரு நிமிஷமும் உன்னை எதிர்பார்க்கிறேன்.

என்றும் உன்னுடைய
சுந்தரவதனம்.

* * *

புத்தூர், 25—3—4

திரு சுந்தரவதனத்துக்கு,

இனி என் மகளுக்கு எழுதவேண்டா என்று எச்சரித்த பின்புகூட அவளுக் என்னவெல்லாமோ எழுத முற்பட்ட விந்தையே! உன் பெற்றோரைப் பற்றி 'கதை' நிலைமையை எவ்விதத்திலு மாற்றி விடவில்லை. நான் வேறு, என் மக வேறு என்ற நினைப்பில், அவள் மனதை மாற்றி என்னிடமிருந்து அழைத்து கொண்டு விடலாம் என்று நீ கருதுவ வெறும் பகற் கனவுதான். அவளுடை பிற்கால வாழ்க்கையைப் பற்றி அக்கை கொள்ளவேண்டிய பொறுப்பு என்னுடை யதே. லட்சக் கணக்கான பால்ய வி வைகள் வாழும் இந்நாட்டில் அவளுடை நிலைமை விசித்திரமல்ல.

உங்கள் வாழ்க்கைப் பாதை பிரிந் விட்டது என்பதை இனியாகிலும் நீ உண வாய் என்று நம்புகிறேன்.

இப்படிக்கு,
அருணாசலம்.

* * *

தஞ்சை, 1—4—4

அன்புள்ள குமுதம்,

நமது தலைவிதியை நிர்ணயிக்கும் பிரம்ம என்ற நினைப்புடன், உன் தகப்பனார் ந முடைய பிற்கால வாழ்க்கையைப் பற்றி திட்டம் வகுத்து விட்டாலும், யோசு

உன் இதயம் காட்டும் பாதையில் துணிவுடன் இறங்கி வந்து இன்பம் நுகருவாய் என்று இத்தனை நாள் பொறுத்திருந்தேன்.

ஆனால், நீ சிறுமி. பெற்றோரின் கட்டளைக்குக் கட்டுப் பட்டவள். என்னுடன் ஒரு மாதத்திற்கும் குறைவாகப் பழகியவள். இந்தச் சம்பவம் உன் வாழ்க்கையை எவ்வளவு தூரம் பாதிக்கும் என்பதைக் கற்பனை செய்யக்கூடச் சக்தி யற்றவள்.

உன் தந்தையோ தன் செல்வச் செருக்கில் பூரித்துக் கிடக்கிறார். உன்னை ஆடை அணிகலன்களினால் அழகு செய்வித்து அவர் மகிழலாம்; ஆனால் உன்னை மகிழ்விக்க முடியாது. உன் வாழ்க்கையைப் பூரணமாக்க முடியாது. பெண்ணின் வாழ்க்கை பூரணமடைவது அவள் கணவனுடன் நடத்தும் காதல் வாழ்க்கையில் தான் என்பது அவருக்கு ஏன் தெரியவில்லை?

அழகிய மலர்கள் பூத்துக் குலுங்கும் மலர்க் கொடியை வளர்க்கும் பெருமை பூமிக்குத்தான் என்றாலும் அது செழித்துப் படர்வது பக்கத்திலுள்ள கொழுக் கொம்பில்தானே! அங்கேதான் அதன் வாழ்க்கை மலர்கிறது; சோபிக்கிறது; பூரணமடைகிறது. அந்தக் கொழுக் கொம்பு முன்னுடையதாயிற்றே என்று பூமி அங்கலாய்ப்பதுண்டா? கொம்பை விட்டுக் கொடியைப் பிரிப்பதுண்டா? கன்னி யெழிலின் காம்பீர்யத்துடனும், இளமையின் இறுமாப்பு மிளிரும் எக்களிப்புடனும் பெருக்



செருத்தோடும் மலையருவி மாட்சி பெறுவது எங்கே? அதன் காதலனுகிய கடலில் கலக்கும்போதுதான்!

அவர் இன்று உன்னைத் தடுத்து நிறுத்தலாம். ஆனல் உன் உணர்ச்சிகளை அவரால் என்றும் தடுத்து நிறுத்திவிட முடியாது. எனக்கு உன்னிடம் நம்பிக்கையுண்டு. காலத்தில் நம்பிக்கையுண்டு. அந்த நம்பிக்கைதான் என்னை வாழச் செய்கிறது. காலம் உன் கண்களை நிச்சயம் திறக்கும். அப்பொழுது—அது எப்பொழுதானுலும் சரி — என்னிடம் வா. உன் வீட்டுக்கு வர நீ யாரையும் அனுமதி கேட்க வேண்டிய அவசியமில்லை. உனக்காக உன் வீட்டுக் கதவு மட்டுமல்ல; என் இதயக் கதவும் எப்பொழுதும் திறந்தேயிருக்கும்.

உன்னை மறவாத,
சுந்தரவதனம்.

* * *

பாலூர், 10—4—44

அன்பர் அருணாசலம் அவர்களுக்கு,

வணக்கம். நமக்கிடையே நெடுநாட்களாக உள்ள நேசப்பான்மையாலும் தங்கள் குடும்பத்தின் நன்மையில் அக்கறை கொண்டவன் என்ற முறையிலும் இதை எழுதத் துணிந்தேன். குமுதத்திற்குக் கல்யாணமான சில தினங்களுக்குப் பிறகு உங்கள் மாப்பிள்ளை வீட்டிற்குச் சென்றிருந்தேன். ஒரு ஜோடிப் புருவைப்போல் குதூகலமாகக் குடும்பம் நடத்தியது கண்டு மகிழ்ந்தேன். ஆனல், நேற்று நான் கேட்ட செய்தி என்னைத் திடுக்கிடச் செய்தது. மாப்பிள்ளையின் பெற்றோரைப் பற்றிய தகவல்—அது உண்மையல்ல — உண்மையாகவே இருப்பினும் என்ன குடி முழுகிவிட்டது? மனமொப்பி மணம் செய்வித்த நமது குழந்தைகளை நாமே பிரித்து வைப்பதால் யாருக்கு என்ன நலம்? அவர்கள் சேர்ந்து வாழ்வதால் நமது குடும்பத்திற்கோ, நமது சமுதாயத்திற்கோ என்ன நஷ்டம்? நாம் கிழவர்கள். குமுதம் பதினறு வயதுக் குமரி. அவள் வாழ்நாளெல்லாம் இயற்கைக்கு மாருக, கணவனிருந்தும் விதவையாகவும், வாழ வகையிருந்தும் வாழா வெட்டியாகவும், உள்ளம் குமுறி, உணர்ச்சி கருகி, இதயம் நொந்து ஏன் அல்லலுற வேண்டும்?

கொஞ்சம் நிதானமாக யோசித்து, நடந்ததைக் கனவாகக் கருதி, குமுதத்தை அவன் வீட்டுக்கு அனுப்பி வையுங்கள்.

தங்கள்,
ஆறுமுகம்.

புத்தூர்,
12—4—44

அன்புள்ள ஆறுமுகம் அவர்களுக்கு,

வணக்கம். என் குடும்ப விஷயத்தில் அக்கறை கொண்டு எழுதிய கடிதத்திற்கு நான் மிகவும் கடமைப் பட்டுள்ளேன். குமுதம் விஷயமாக, தீர்க்கமான ஆலோசனைக்குப் பிறகே இந்த முடிவுக்கு வந்தேன். என் குடும்ப விஷயத்தில் எனக்கு அக்கறையில்லை என்று யாரும் சொல்ல முடியாது. குடும்ப கௌரவம் என்ற பலிபீடத்தில் நான் எதையும் தியாகம் செய்யத் தயங்க மாட்டேன். ஒழுங்கு நியதியற்ற சமுதாயம் இருந்தென்ன, போயென்ன? தற்போது இதற்குமேல் தங்களிடம் விவாதிக்கத் தயாராயில்லை. மன்னிக்கவும்.

தங்கள்,
அருணாசலம்.

* * *

புத்தூர், 15—6—44

அன்புள்ள காமாக்ஷி,

நம்முடைய ஊர் சின்னதாக இருந்தாலும் விசேஷங்களுக்கு மட்டும் என்றுமே குறைவில்லை. நாலு மாதத்திற்கு முன்பு குமுதத்திற்குக் கல்யாணம் நடந்ததல்லவா, ஏக தடபுடலாக! 'போன மச்சான் திரும்பி வந்தான்!' என்ற கதையாக அவள் திரும்பி வந்து விட்டாள். மாதம் மூன்றாகிறது, அவன் அழைக்கவில்லை. திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. 'மாப்பிள்ளை பிடிக்கவில்லை; வாழ்ந்தது போதும்' என்று அழைத்துக் கொண்டு வந்து விட்டோம் என்று சொல்லுகிறார்களாம். எங்கேயாவது இப்படி உண்டா? பலர் பல விதமாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள். 'விஷயமே வேறே!' என்று ருக்கு சொல்லுகிறாள். அவளுக்குத் தெரியாதது ஏது? குமுதம் பணக்காரிதான். பணம் எல்லாவற்றையும் ஜீரணிக்கும் மருந்து என்பதும் உண்மைதான். ஆனல் இந்த விஷயத்தில் புருஷர்கள் மனம் ஒப்புமா? அதனுலே அவன் 'போடியம்மா, பிறந்த வீட்டிற்கே!' என்று சாருக்காக அனுப்பி விட்டான் என்று கேள்வி. இன்னும் என்னென்ன 'வேடிக்கைகள்' நடக்கப் போகிறதோ! — நடக்கட்டும், நடக்கட்டும். கண்ணிருக்கு பார்க்க; காதிருக்கு கேட்க; கையிருக்கு உனக்கு எழுத!......

அன்புள்ள,
பார்வதி.

திருச்சி, 18—3—45.

அன்பார்ந்த சுந்தரவதனம்,

சமீப காலத்தில் உன் போக்கே விசித்திரமாக, புரிந்து கொள்ள முடியாததாக இருக்கிறது. கல்யாணமாகியும் பிரம்மசாரியாக நீ காலம் கழிப்பானேன்? ஒன்று, உன் மனைவியைத் திருப்பி யழைக்க ஏதாவது முயற்சி செய். எனக்கென்னவோ அது சாத்தியம் என்று தோன்றவில்லை. உன்னிடம் உண்மையிலேயே அன்பு கொண்டவளாக இருந்தால் என்னதான் பெற்றோர் கட்டுப்படுத்தினாலும் ஒரு வருஷ காலமாகக் கணவனை விட்டுத் தனித்து வாழ எந்தப் பெண்ணும் விரும்பமாட்டாள். இது என் மனைவியின் அபிப்பிராயம். ஆகவே, அதைவிட நீ வேறு கல்யாணம் செய்து கொள்வதே நல்லது. காலம் வகை செய்யும் என்று காலத்தின்மேல் பாரத்தைப் போட்டுவிட்டுக் கண்ணை மூடிக் கொண்டிருப்பது கிழவர்களுக்கு ஒரு சமயம் பொருந்தும். நமது வாழ்க்கையை, நமது எதிர்காலத்தை, நாமே சிருஷ்டிக்கும் சிற்பிகளாக ஒவ்வொருவரும் ஆகவேண்டும். இறந்த காலத்தைத் திரும்பிப் பாராதே! எதிர்காலத்தை நம்பு!

உன் அன்பன்,
நடராஜன்.

குறிப்பு:—என்னுடன் சில தினங்கள் வந்து தங்கிவிட்டுப் போவதால் உன் 'சதி விரதம்' கெட்டுப் போய்விடாதே!—நீ. ந.

• • •

தஞ்சை, 22—3—44.

அன்புள்ள நடராஜ்,

உன் கடிதத்துக்கு நன்றி. குமுதம் என்னுடன் வாழ்ந்த ஒரு மாத காலத்தில் மிகவும் அன்பாகவே யிருந்தாள். அவள் மனம் மாறிவிட்டதென்பதற்கு ஆதாரம் எதுவுமில்லை. எனது வரையில் அவளாக என்னை வெறுக்கவுமில்லை; நிராகரிக்கவுமில்லை. பாவம், அவள் சிறு பெண். தாம்பத்ய உறவின் தன்மையை முழுதும் தானே உணர்வதற்கான வயதை அவள் இன்னும் அடையவில்லை. இன்னும் இரண்டொரு வருஷம் கழிந்தால் தானே உணர்வு பெறுவாள். அதற்குப் பின் அவள் என்னை யடைவதை யாராலும் தடுக்க முடியாது. இதற்கிடையில் மறு மணத்தைப் பற்றி எழுதி என் மனதை ஏன் குழப்புகிறாய்? நான் அடுத்த வாரம் வருகிறேன்.

அன்பு,
சுந்தரவதனம்.

புத்தூர், 25—1—46.

அன்புள்ள ஆனந்தவல்லி,

தை பிறந்தால் வழி பிறக்குமாம். எனக்கு மட்டும் ஒரு வழியையும் காணோம். இனி என்றுமே பிறக்காதோ?

மீனாக்ஷிக்குக் கல்யாணமாகி விட்டது. கல்யாணிக்கு அடுத்த வாரம் நடக்கும். நமது தோழியர்களில் இனி யாரும் பாக்கியில்லை.

நான் இப்போது வெளியில் தலை காட்டுவதுகூட இல்லை. எல்லோரும் என்னைக் கண்டதும் ஏதோ 'கசமுசு' வென்று பேசுகிறார்கள். ஜாடை காட்டிச் சிரிக்கிறார்கள். எல்லாம் என்னைப் பற்றித்தான்; என் பாழாய்ப்போன வாழ்க்கையைப் பற்றித்தான். அதெல்லாம் என் காதில் விழாமலா இருக்கிறது? என் கெட்ட நடத்தைக்காகவே என் கணவர் என்னைத் தள்ளி வைத்து விட்டாரென்றும் இப்பொழுதுங்கூட நான் அப்படித்தான் என்றும் நேரில் கண்டதைப் போல் நாக்கில் நரம்பில்லாமல் பேசுகிறார்கள். அதற்கு முன்பு வெகு மரியாதையாக நடந்து கொண்ட யுவர்கள் கூட என்னைக் கண்டதும் ஒரு மாதிரியாகப் பல்லை இளிக்கிறார்கள். விசித்திரமாகவும் நடந்து கொள்ளுகிறார்கள்.

பாவம், அவர் எவ்வளவோ நல்லவர். எவ்வளவோ அன்பாக இருந்தார். கொடுத்து வைக்காத பாவி, நான்! அவருடைய அருமையை உணராமல் அப்பாவின் அதிகாரத்திற்குப் பயந்து இங்கேயே இருந்து விட்டேன். அதற்குப் பிறகுங்கூட எவ்வளவோ பரிவுடனும், விசுவாசத்துடனும் எழுதினாரே!

என் வாழ்வைப் பலி கொடுத்துவிட்டு அப்பா அடைந்த பலன்தான் என்ன? அன்று குடும்ப கௌரவம் கொள்ளை போகிறதென்றாரே, இன்று அதைவிடக் கேவலமாகச் சிரிப்பாய்ச் சிரிக்கிறதே!

என் பெண்ணுள்ளம் எவ்வளவு ஏங்குகிறது என்பதை அப்பாவால் அறிய முடியுமா? அவருக்கென்ன, 'வேளா வேளைக்குச் சோறு கிடைக்கிறதே, அதுவே போதாதா?' என்ற நினைப்பாக இருக்கலாம். வயிற்றுப் பசியைத் தீர்த்து விட்டால் என் வாழ்க்கைப் பசி தீர்வது எப்போது? என் உள்ள வேதனை தீர்வது என்றைக்கு? என் இதயக் குமுறலை யார்தான் உணர முடியும்? யார் அறிந்தும் அவர் அறியா விட்டால்......?

லக்ஷ்மிக்குப் போன வாரம் ஆண் குழந்தை பிறந்தது. கண்ணம்மாவுக்கு நேற்றுத்தான் வளைகாப்பு. அவர்கள் எல்லோரும் பாக்கியசாலிகள். எல்லாம் அவரவர் விதிப்படிதானே நடக்கும்?

நீ எப்போது இங்கே வருவாய்? நீ வந்தாவாவது எனக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருக்கும்.

உன் துரதிருஷ்டத் தோழி,
குமுதம்.

* * *

நாகை, 30—1—46.

அன்புள்ள குமுதம்,

உன் கடிதத்தைப் பார்த்ததும் எனக்குப் பகீரென்றது. கலங்காதே! இதெல்லாம் நான் எதிர்பார்த்ததுதான். ஒரு பெண்ணைத் தூற்றுவதற்கு உலகம்—அதிலும் பெண்ணுலகம்—கொஞ்சங்கூட அஞ்சாது. இதில் மட்டும் அவர்கள் மென்மை யுணர்ச்சியும், இரக்கச் சிந்தையும் எங்கேயோ பறந்து விடுகிறது! அவர்களைச் சொல்லி என்ன? எல்லாம் உன்னால் வந்ததுதானே?

நான் அன்றைக்குச் சொன்னேன்: 'உன்னைவிட பாக்கியசாலி யாருமே கிடையாது. அவர் உன் கண்ணிறைந்த கணவர்; காதல் தெய்வமாகத் தன் மனதில் இருத்தி உன்னைப் பூஜிக்கிறார். உன் வாழ்வும் தாழ்வும் என்றைக்கும் அவரிடம்தானே? கணவரிடம் காதல் வாழ்வு பறிபோன பின் உன் அப்பாவின் ஆஸ்தி என்ன செய்யும்? அவரிடம் போய் விடு' என்று. அதையேதான் இப்பொழுதும் சொல்லுகிறேன். இந்த நிமிஷமே போனாலும் அவர் உன்னை மனமுவந்து ஏற்றுக் கொள்வார். அவரே உனக்கு எழுதவில்லையா, 'உன் வீட்டுக்கு வர நீ யாருடைய அனுமதியும் கேட்க வேண்டாம். உன் வீட்டுக் கதவு மட்டுமல்ல, என் இதயக் கதவும் எப்போதும் உனக்காகத் திறந்திருக்கும்' என்று. உனக்கு இதைவிட இன்னும் என்ன வேண்டும்? உன் வீட்டிற்குப் போவதை யார் தடுக்க முடியும்? நீ இன்னும் சிறுமி யல்ல. வயது பதினெட்டு ஆகி விட்டது. நீயும் எல்லோரையும் போல வாழவேண்டும். துணிவுடன் புறப்படு, இன்றைக்கே போ!

அன்பு,
உன் உயிர்த் தோழி,
ஆனந்தவல்லி.

தஞ்சை, 5—2—46.

அன்புள்ள ஆனந்தவல்லி,

நாலு நாளாக எழுத நினைத்தும் இன்றைக்குத்தான் முடிந்தது. உன் கடிதம் என் கண்களைத் திறந்தது. துணிவூட்டியது. அன்றே புறப்பட்டேன்.

வீட்டின் கதவு திறந்துதான் இருந்தது. உள்ளே நுழையவே கால் கூசிற்று. நடுக்கத்துடன் மெல்ல நுழைந்தேன். ஏதோ காரியமாக இருந்தவர் என்னைப் பார்த்தார். பிரமித்துப்போய் அப்படியே நின்றார். எனக்குக் கைகால் ஓடவில்லை, வாயடைத்து விட்டது; தொண்டை வறண்டு விட்டது; மார்பு படபட வென்று அடித்துக் கொண்டது. திக்குமுக்காடித் திணறி இரண்டடி நடந்து அப்படியே அவரருகில் விழுந்தேன்.

சிறிது நேரத்திற்குப் பிறகு கண் விழித்ததும் அவர் மடியில் கிடப்பதை உணர்ந்தேன்.

"என்னை ...... மன்னித்து ......" என்றேன் நாக் குழற.

"அதெல்லாம் வெறுங் கனவு; அதை மறந்து விடு!" என்று அவர் என்னை ஆதரவுடன் தழுவிக்கொண்டார். அந்த க்ஷணம் — அதை நான் எப்படி விவரிப்பேன்? அநுபவித்தறியாத ஆனந்தத்தில் மிதந்தேன். அந்த இன்ப வேதனை — அதை என்னால் எழுத முடியாது. தயவு செய்து நீ வந்து என்னுடன் சில நாட்கள் தங்கி இரு. என் உள்ளத்தில் உள்ளவற்றை யெல்லாம் உன்னிடம் கொட்ட வேண்டும்போல் இருக்கிறது. இருளில் திக்குத் தெரியாது திண்டாடியவளுக்கு வாழ வழி காட்டி இன்ப விளக்கை ஏற்றி வைத்த உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!

அன்று முதல் கடந்த வாழ்க்கைப் பற்றிய பேச்சோ, நினைவோ இன்றிப் புது உலகில் வாழ்கின்றோம். மாமனாரும் எங்களுடன் தான் இருக்கிறார்; அவர் தங்கமானவர்.

இன்னொன்று சொல்ல மறந்து விட்டேனே! அப்பாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அவர் என்னை ஒரேயடியாகத் 'தலைமுழுகி' விட்டாராம்! இனி ஒரு செல்லாக் காசுகூட எனக்குக் கிடைக்காதாம்!— அவரே அதைக் கட்டிக் கொண்டு அழட்டுமே! பெண்மையின் பெருநிதி கிடைக்கப் பெற்ற எனக்கு அது செல்லாக் காசு தானே! தயவு செய்து வா!

அன்புள்ள,
குமுதம்.

# வட்ட மேஜை

பல்லாவரம், 21—7—47

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

வரும் ஆகஸ்ட் மாதம் 15ம் தேதி யன்று இந்திய மக்கள் அனைவரும் அன்னையின் மணிக் கொடியை அவரவர் வீட்டில் ஏற்றி வைத்து அதனை வணங்குதல் வேண்டுமென்று அ. இ. கா. கமிட்டி ஆக்ஞாபித்திருக்கிறது. அதற்கொப்ப, இந்தியாவின் தேசியக் கொடி எல்லா இந்திய மக்களுக்கும் குறிப்பிட்ட தேதிக்குள் கிடைக்கச் செய்தல் வேண்டும். அந்தக் கொடிகளைச் சம்பந்தப்பட்ட காங்கிரஸ் கமிட்டிகளோ அல்லது அரசாங்கத்தாரோ போதிய அளவு தயார் செய்து, அதை வேண்டுபவர் அனைவருக்கும் கிடைக்கச் செய்தல் மிக அவசியமாகும். அதற்காகும் செலவைப் பாரத மக்களும், முக்கியமாகத் தமிழர்களும் கொடுக்கத் தயங்கமாட்டார்கள்.

தி. ரங்கநாதன்.

நாகூர், 20—7—47

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

தங்களுடைய 20-7-47 ம் தேதி பத்திரிகையின் வட்ட மேஜையில் வெளியாகி யிருக்கும் எம். எஸ். ரங்கநாதனின் கடிதத்தை மிகவும் சந்தோஷத்துடன் வரவேற்கிறேன்.

ஹிந்து, முஸ்லிம் இரு வகுப்பினருக்கும் புண்ணிய தினமாய் விளங்கும் வெள்ளிக் கிழமையில், இந்தியாவின் ஆட்சிப் பொறுப்பும் மாறுவதைக் கொண்டு அந்நாள் நன்னாளாய் இந்தியச் சரித்திரத்தில் விளங்கப் போகிறது. இந்தக் காரணத்தைக் கொண்டாவது வெள்ளிக்கிழமை, சர்க்கார் விடுமுறை நாளாய் இருக்க வேண்டுமென்று தலைவர்களுக்கு எடுத்துச் சொல்லும்படி வேண்டுகிறேன்.

ஏ. ஆர். கே. மொய்தீன்.

திருச்செங்கோடு
27—7—47

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

சென்ற இரண்டு வார கல்கி இதழ்களில் வட்டமேஜை என்னும் தலைப்பின் கீழ் வெளியாகியுள்ள இரு நண்பர்களின் கடிதங்களைப் படித்தேன். சர்க்கார் விடுமுறை நாள் பிரச்னையை நண்பர்கள் மத நோக்கத்துடன் அணுகுகிறார்கள் என்று நினைக்கிறேன்.

ஹிந்துஸ்தான் சர்க்கார் ஒரு மதத்தினருக்கு மட்டும் சொந்தமல்ல, எல்லா மதத்தினர்களுக்கும் சொந்தமானது என்று சொல்லும் நண்பர் அலெக்ஸாண்டர், ஞாயிற்றுக்கிழமையை லீவு நாளாகச் செய்தால், ஹிந்துக்களுக்குக் கஷ்டம் உண்டாகுமென்று சொல்வதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒவ்வொரு மதத்தினருக்கும் ஒவ்வொரு கிழமை முக்கியமாய் இருப்பதால் சர்க்கார் இதைக் கொண்டு விடுமுறை தினத்தை நிர்ணயிப்பது சரியல்ல. வெள்ளிக்கிழமைகளில் தான் பூராவும் கடவுளை நண்பர் ரங்கநாதன் தொழுது கொண்டிருக்க மாட்டார் என்று நண்பர் அலெக்ஸாண்டர் நினைக்கிறார். அப்படியே நண்பர் ரங்கநாதனும், நண்பர் அலெக்ஸாண்டர் விஷயத்திலும், ஞாயிற்றுக் கிழமைகள் சம்பந்தமாக நினைக்கலாம். நிற்க.

ஹிந்துக்களுக்கு வெள்ளிக் கிழமைகள் மட்டும் விசேஷ நாட்கள் அல்ல, ஞாயிறு முதல் சனி வரை எல்லா நாட்களும் விசேஷமானவை. கடவுளைத் தொழுவதற்கு நாளும், நட்சத்திரமும் ஹிந்துக்களுக்குக் கிடையாது.

வெள்ளிக் கிழமையானது, பாரதநாடு பிரிட்டிஷ் ஏகாதிபத்திய இரும்புப் பிடியிலிருந்து விடுதலை அடைகிற நாளானபடியால், அதுவே நம் நாட்டின் வாராந்திர விடுமுறை தினமாக இருக்கவேண்டும் என்பதை யாரும் ஆக்ஷேபிப்பதற்கில்லை.

பாகிஸ்தான் சர்க்காரில் வெள்ளிக் கிழமையை விடுமுறை நாளாக வைத்துக் கொள்வதில் கவலைப்படாத நண்பர் அலெக்ஸாண்டர், ஹிந்துஸ்தான் சர்க்காரிலும் அப்படிச் செய்வதற்காகக் கவலைப்பட வேண்டியதில்லை. (பாகிஸ்தானிலும் கிறிஸ்துவ நண்பர்கள் இருக்கிறார்கள்.)

ஆகையால் இந்திய "சுதந்திரத் திருநாள்" ஆரம்பிக்கும் வெள்ளிக்கிழமை இந்திய சுதந்திர சர்க்காரின் வாராந்திர விடுமுறை தினமாக நிர்ணயிக்கப்பட வேண்டுமென்று நம் தலைவர்களுக்கு எடுத்துக் கூறும்படி வேண்டிக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
டி. எஸ். வெங்கடராஜன்.




போட்டிக் கதை—5.

# ரோகிணி எங்கே?

பி. எஸ். சேஷாத்ரி

டான்......

ஆபீஸ் கடிகாரம் மாலை 3-30 மணியை அறிவித்தது.

நாராயணனுக்கு வேலையில் மனம் லயிக்கவே யில்லை. யந்திரம் போல அவன் கை அவ்வப்போது ஏதோ எழுதிக் கொண்டிருந்ததே தவிர அவன் மனம் வீட்டைப் பற்றிய சிந்தனைகளில்தான் மூழ்கியிருந்தது.

நாராயணனுக்கும் அவன் மனைவி ருக்மிணிக்கும் தாம்பத்யக் கலகம் ஏற்பட்டு இன்றோடு விளையாட்டுப் போல நான்கு நாட்களாகி விட்டன. சிரிப்பும், கலகலப்புமாயிருந்த வாழ்க்கையில் நிசப்தம் நிலவியது. இயற்கைக்கு மாறான இந்த அமைதி அவனுக்குக் கல்லறையின் சாந்நிதியை நினைவு மூட்டியது போல இருந்தது. இந்த இரண்டு மூன்று தினங்களாகவே அவனிடத்தில் ஏற்பட்டிருந்த திடீர் மாறுதலை அவனைத் தெரிந்தவர்கள் கவனிக்காமல் இல்லை. ஓட்டலில் சாப்பிடும்போது கையும் களவுமாய்ப் பிடித்துவிட்ட அவன் நண்பன், "என்னப்பா, வீட்டில் மனஸ்தாபமா என்ன, ஓட்டலுக்கு வந்திருக்கிறாயே!" என்று வேடிக்கையாகக் கேட்டதுகூட அவனுக்குச் சுருக்கென்று தைத்தது. தன் ரகஸ்யம் தெரிந்து அதை அம்பலப்படுத்தி விட்டாற்போலத்தான் அவனுக்குத் தோன்றியது. ஏதோ அசடு வழிய நத்துப் பித்தென்று சொல்லிவிட்டு ஒருவாறு சமாளித்துக் கொண்டான்.

"ஸார், உங்களுக்குத் தபால்!" என்று ஆபீஸ் பியூன் ஒரு கவரை அவன் மேஜை மேல் வைத்தபோதுதான் நாராயணனுக்கு இந்த உலக நினைவே வந்தது. கவரைப் பார்த்ததும் அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஒரு கண நேரத்தில் அவனுடைய மனத்தில் என்னென்னவோ பயங்கரக் கற்பனைகள் எல்லாம் மின்னி மறைந்தன. அந்தக் கவரின் மேல் விலாசம் எழுதியிருந்தது அவனுடைய சாட்சாத் மனைவி ருக்மிணியின் கையெழுத்தாயிருந்ததுதான் அந்த அதிர்ச்சிக்குக் காரணம். ஆவலோடும் பரபரப்போடும்




கடிதத்தைப் பிரித்தான். அவளேதான் எழுதியிருந்தாள்!

..............

..............

......நான் வீட்டிலிருந்து கொண்டு, ஆபீசுக்குப் போயிருக்கும் உங்களுக்கு இந்தமாதிரிக் கடிதம் எழுத நேர்ந்தது விநோதமாய்த் தோன்றலாம். நேரில் பேச முடியாததினால் தான் இந்தப் புதிய முறை என்பது உங்களுக்குத் தெரியாததல்ல. உங்களிடம் தாழ்ந்து பேசுவதால் என்னுடைய கௌரவத்துக்கு எதுவும் குறைவு வந்துவிடாது. நானாக வலிய வந்து பேசினாலுங்கூட நீங்கள் முகம் கொடுத்துப் பேசுவீர்களோ மாட்டீர்களோ என்ற சந்தேகந்தான்.

......உங்களுக்குப் பிடிக்காத முறையில் நான் பேசி விட்டிருந்தால் அதற்காகக் கேட்பதெல்லாம் உங்கள் மன்னிப்பு, மன்னிப்பு, மன்னிப்புத்தான்! என்னை எப்படி வேண்டுமானாலும் தண்டியுங்கள்; இந்தப் பிணக்கும் நரகவேதனையும் மட்டும் வேண்டாம். உங்கள் வாடிய முகத்தைப் பார்க்கும் போதெல்லாம் 'பாவி, நான்தானே இவ்வளவுக்கும் காரணம்' என்று என்னையே எவ்வளவு நொந்து கொள்கிறேன், தெரியுமா? எனக்கு என்ன எழுதுவதென்றே தெரியவில்லை. என்னைப் படுத்தினது போதும்: இனியும் சோதிக்காதீர்கள். உங்கள் விருப்பம் போலவே, கணவன் எதிரில்கூடப் பேசாமல் நளாயினி, சீதை, தமயந்தி, சாவித்திரி முதலியவர்கள் இருந்ததாகச் சொல்லுகிறீர்களே, அந்த மாதிரி வேண்டுமானாலும் இருக்கிறேன்.

....................

ருக்கு.

கடிதத்தைப் படித்ததும் நாராயணன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். அவன் மனத்தை இதுகாறும் அழுத்தியிருந்த பாரத்தின் கனத்தை அளப்பது போலிருந்தது அந்தப் பெருமூச்சு. அந்தக் கடிதத்தைத் திரும்பத் திரும்பப் படித்தான். கலியாணமான புதிதில் ருக்கு எழுதிய முதல் கடிதத்தைக் கண்டுகூட அவனுக்கு இவ்வளவு ஆனந்தம் உண்டாகவில்லை. தனக்கும் தன் மனைவிக்கும் இடையில் ஏற்பட்டிருந்த அர்த்தமில்லாப் பிணக்கை அந்தக் கடிதம் சரிப்படுத்திவிட்டது. தங்களுக்குள் ஏற்பட்டிருந்த மனவேற்றுமையை மாற்றுவதில் தன் மனைவி தன்னை முந்திக்கொண்டு விட்டதில் அவனுக்குப் பரம சந்தோஷம். ஆண்மையின் வீராப்புக்கு எதிரில் பெண்மையின் சாகசமன்றோ வணக்கிவிட்டது! என்னவானாலும் படித்த பெண்; நாலுந் தெரிந்தவள். விஷயத்தை எவ்வளவு வக்கணையாயும் லாகவமாயும் பிரஸ்தாபித்திருக்கிறாள்! அதுவும் தன்னையும் தன் சர்வாதிகார மனப்பான்மையையும் இலேசாகக் கேலி வேறு அல்லவா செய்திருக்கிறாள்! நளாயினி, சீதை...... அப்பப்பா! எவ்வளவு சமர்த்து! பொல்லாத்தனம்! வீட்டில் பேசவில்லை என்பதற்காக ஆபீசுக்கு கடிதமெழுதும் விநோத யோசனை எல்லாப் பெண்களுக்குமா தோன்றிவிடும்! ருக்கு மட்டில் எஸ். எஸ். எல். ஸி. வரையில் படித்தது வீணாகவில்லை என்பதுதான் நாராயணனுக்குப் பட்டது.

நாழிகை ஆகிவிட்டதால் கோட்டை மாட்டிக்கொண்டு குஷியாக, 'மாயப் பிரபஞ்சத்தில் ஆனந்தம் வேறில்லை!' என்ற பழையகாலப் பாட்டைச் சீட்டி யடித்துக் கொண்டே கிளம்பினான் நாராயணன். இரண்டு தினங்களாய்த் திரும்பிக்கூடப் பார்க்காத மார்க்கெட்டுப் பக்கம் போய் ஒரு கவுளி 'ஸ்பெஷல்' வெற்றிலையும், வெள்ளிக்கிழமை யாயிற்றே என்று சாவனுவுக்குக் கதம்பமும், சாவனுவுக்கு மல்லிகைச் சரமும் வாங்கிக் கொண்டான்.

யாரோ இளந் தம்பதிகள் கலகலவென்று பேசி நகைத்துக் கொண்டே நாராயணனைத் தாண்டிச் சென்றது அவனைக் கேலி பண்ணுவது போலிருந்தது. அழகு இல்லாதது மட்டுமல்ல, குரூபி யென்றே சொல்லக் கூடிய அந்தப் பெண்ணோடு எவ்வளவு சல்லாபமாயிருக்கிறான், அந்த இளைஞன்! வாழ்க்கையில் கிடைக்கும் இன்பத்தைப் பிழிந்து எடுத்து அனுபவிக்கும் அவன் கெட்டிக்காரனா? அழகும் சமர்த்துமான ருக்குவோடு காரணமில்லாமல் மனஸ்தாபப் பட்டுக்கொண்டு பரிதவிக்கும் தான் கெட்டிக்காரனா என்ற தர்க்க ரீதியான சர்ச்சையில் ஈடுபட்டு அவன் மனம் தன்னைத் தானே கண்டித்துக் கொள்ளும் சமயம்

…, தவிர்க்க முடியாத ஒரு முடிவுக்குத் …ன் வர முடிந்தது.

அப்போதுதான் வானத்தில் மங்கலாக …யமாகிக் கொண்டிருந்த பௌர்ணமிச் …நிலை நாராயணன் ஆர்வம் ததும்ப …க்கினான். அவனையுமறியாமல் அவன் … சட்டைப் பைக்குள் சென்று ருக்கு …யிருந்து அன்று வந்த கடிதத்தை …ஆசையோடு தடவியது.

…சென்ற தினங்களின் நிகழ்ச்சிகளை …ம்ப முதல் சிந்தித்துக் கொண்டே …ந்து சென்றான்.

• • •

நாராயணனும் ருக்குவும் ரொம்பவும் …ன்னியோன்னியமான தம்பதிகள்தாம். …யாணமான புதிதில் நாராயணன் தன் …பர்களிடத்தில் தனக்கு மனைவி கிடைத் …துள்ள அதிர்ஷ்டத்தைப் பற்றிப் …ருமை யடித்துக் கொண்டதைக் …்டே அதுவரையில் கலியாணமாகா …்தவர்கள்கூட தங்களது அதிர்ஷ்டத் …யும் பரீட்சை பண்ணிப் பார்க்கத் …ணிந்து விட்டார்கள். குடித்தனம் …்த புதிதில் இவர்களுக்குள் இருந்த …ன்னியோன்னியத்தையும், பரஸ்பர பாசத் …யும் பார்த்த பக்கத்துக் குடித்தனக் …்--சமீபத்தில்தான் மூன்றாந்தாரமாகக் …யாணம் பண்ணிக் கொண்டவர்—ஜாகை …ற்றிக்கொண்டு வேறு தெருவுக்குக் குடி …ய் விட்டார் என்றால் பார்த்துக் …ள்ளுங்களேன்! அவ்வப்போது ஏதா … சில்லறைத் தகராறுகள் வந்தாலும் சில …டங்களுக்கு மேல் நீடிக்காது. இந்த …ிறி ஊடல்களும், பாசாங்குக் கோபமும் … பெண் வாழ்க்கையைத் தெவிட்டாமல் …ப்பதற்கு இன்றியமையாதன என்பது …்துறை இலக்கணத்தை பீ. ஏ., …ைக்குப் பாடமாகப் படித்த நாரா …னுக்குத் தெரியாததல்ல.

…னால் இந்தத் தடவை விஷயம் வேறு …ரி யாகிவிட்டது. அந்த ஊடல், …க்கை பிணைப்பதை அதிகரிக்கச் …யும் தென்றலோடு மட்டும் நிற்காமல், …க்கை அமைதியையே குலைத்துவிடுமோ …ு பயப்படும் அளவுக்குப் புயலாக …விட்டது.

…ஷயம் அப்படி ஒன்றும் பிரமாதமல்ல. …லிலிருந்து திரும்பும்போது நாரா …ன் வழியில் தன் நண்பன் பட்டாபியைச் …்தான். பேசிக்கொண்டே இருவரும் வீட்டுக்கு வந்தார்கள். காப்பி சாப்பிட்டு விட்டுப் பேச ஆரம்பித்தவர்கள் நேரம் போவதே தெரியாமல் பேசிக் கொண்டிருந்து விட்டார்கள். ரொம்ப நாழிகை ஆகிவிட்டதால் பட்டாபியையும் தன் வீட்டிலேயே சாப்பிடும்படி நாராயணன் வற்புறுத்தினான். ருக்குவும் தங்களுக்காகத் தயாரித்திருந்த சாப்பாட்டை தீரவி விட்டாள். அந்தமட்டில் அது அவர்கள் இருவருக்கும் சரியா யிருந்ததே ருக்குவுக்கும் போதும் என்று இருந்தது.

நண்பனை பஸ் ஸ்டாண்டு வரை கொண்டு விட்டு நாராயணன் திரும்பியபோது மணி பத்துக்கு மேலாகி விட்டது. நாலைந்து தடவை கதவைத் தட்டின பிறகே ருக்கு தூக்கம் கலைந்து வந்து கதவைத் திறந்தாள்.

"என்ன, அதற்குள்ளாகவா தூங்கி விட்டாய்? சாப்பிட்டாயா? எப்படி முடிந்தது? நாங்கள்தான் உனக்கு ஒன்றும் மீதம் வைக்கவில்லையே? திரும்பவும் சாதம் வடித்துத்தானே சாப்பிட்டாய்?" என்று



அடுக்கிக் கொண்டே போனான் நாராயணன். அவன் கேள்விகளில் வாஞ்சையும் அங்க லாய்ப்பும் தொனித்தன.

"வாருங்கள், எனக்குத் தூக்கம் கண்ணை அழுத்துகிறது. எல்லாம் காலையில் பேசிக்கொள்ளலாம்!" என்றாள் ருக்கு.

கதவைத் தாளிட்டுக்கொண்டு திரும்பும் போது நாராயணன் சமையல் அறையில் எட்டிப் பார்த்தான். பாத்திரங்களை எடுத்துப் பத்துத் தேய்ப்பதற்காக ஜலதாரையில் போட்டிருந்தது. இரண்டாவது சாதம் வடித்ததற்கு அறிகுறிகள் எதுவும் காணோம்.

"என்ன ருக்கு, என்னமோ கேட்கிறேன், காலையில் பேசிக்கொள்ளலாம் என்கிறாயே! நீ இப்போது சாப்பிட்டாயா, அல்லது பட்டினிதானா? என் தலையில் என்ன பாவத்தை யெல்லாம்......"

"ஐயையோ! பாவமும் புண்ணியமும் எங்கே வந்தது? எனக்குப் பசிக்கவே யில்லை. உடம்பும் ரொம்ப தள்ளாமையா யிருந்தது. பாலைச் சாப்பிட்டுவிட்டுப் படுத்துக் கொண்டேன்" என்றாள்.

இதை அவள் சாதாரணமாய்த்தான் சொன்னாள். நாராயணனும் சாதாரணமாய் எடுத்துக் கொள்வான் என்றுதான் எதிர் பார்த்தாள். அவள் வகையில் இதில் எதும் தப்பிதமாகவே தோன்றவில்லை.

ஆனால் நாராயணனுக்கு ருக்குவின் பதில் குற்றமாகப் பட்டது. முன் பின் சொல்லாமல் திடீரென்று தான் விருந்தாளியைச் சாப்பாட்டுக்கு உட்கார்த்தி வைத்ததனால் தானே அவளுக்குச் சாதம் இல்லாமற் போய்விட்டது! தன்னுடைய இந்தச் செய்கையைத்தான் தன் மனைவி, இந்த மாதிரி முறையில் உண்ணா விரதமிருந்து கண்டிக்கிறாள் என்று அவனுக்குத் தோன்றியது. தான் என்ன, அப்படி மனைவியின் கஷ்ட நிஷ்டூரம் தெரியாத காட்டுமிராண்டியா? ருக்குவின் இந்த நடத்தை பெண்கள் சமூகமே ஆண்களின் கட்சிக்கு விடும் அறைகூவல் என்றுதான் அவன் நினைத்தான்.

"ஏன் படுத்துக்கொள்ள வரவில்லையா?" என்றாள் அவள் மெதுவாக. தன் கணவ னின் முகத்திலேற்பட்ட மாறுதல்களை அவள் அந்தத் தூக்கக் கலக்கத்திலும் கவனித்து விட்டாள்.

"தூங்குகிறேன், தூங்குகிறேன்! நீ சாப் பிடவில்லை யென்று என்னால் பதிலுக்குத் தூங்காமலிருக்க முடியுமா, என்ன! நான் காலையில் எழுந்ததும் ஆபீசுக்கு ஓ வேண்டுமே! நீ தெய்வாம்சம், உனக்கு பசி கிடையாது; நான் வெறும் மனித தானே! எனக்கு வயிறு இருக்கிறதே, உழைத்தால்தானே......!"

"எதற்காக என்னை வம்புக்கு இழுக் கிறீர்கள்? எனக்கு நிஜமாகவே பசி இல் அதனால் சாப்பிடவில்லை என்றேன்."

"என் நண்பன் வராமலிருந்தா உனக்குப் பசித்துத்தானே இருக்கும் சாப்பிட்டுத்தானே இருப்பாய்!"

"கொஞ்சம் சொல்வதைக் கே ண்டு......" என்று ஆரம்பித்தவள், ஓ கொட்டாவி குறுக்கிட்டதால் மேலே பே முடியாமல் நிறுத்தினாள்.

"சொல்வதற்கும் கேட்பதற்கும் என் இருக்கிறது? இனிமேல் எழுமு ஜன்ம திற்கும் நான் யாரையும் விருந்தாளியா அழைத்து வரவில்லை. நீயும் உண்ணாவி மிருந்து என் கழுத்தை அற வேண்டாம்! சரிதானே?" என்று அவ சீண்டினான்.

ருக்குவுக்குக் கோபம் கோபமா வந்தது. தான் சொல்வதைக் கேட்கா தன் கணவன் ஒரே பிடியாய்ச் சாதிப்ப அவளுடைய எரிச்சலைத்தான் கிளப்பியது. "உங்களை யார் அழைத்துவரவேண்டா மென்றது? ஆயிரமாய் அழைத் வாருங்கள்! இது உங்கள் வீடு! ஆ கொஞ்சம் முன்னதாகச் சொன்னால் வ வர்களுக்கு வயிறு நிறையப் போடச் சாத வர இருக்கும்!" என்றாள்.

நாராயணன் எதிர்பார்த்ததும் இதுதா அவனுடைய நிலைமை அடிபட்ட வேங்கை னுடையதைப் போல இருந்தது. தா 'நோட்டீசு' கொடுக்காமல் நண்பனை சாப்பிட அழைத்ததைத்தான் அ அப்படிக் குத்திக் காட்டுகிறாள் என் அவன் நிர்மானித்தான்.

"சரி, சரி; சாப்பிடுவதையும் சாப்பி ததையும் முன்னாடிதானே சொல் வேண்டும்? நான் நாளைக் காலை இ சாப்பிடவில்லை!" என்று சீறினான் அர் யில்லாமல்.

"ஏனோ?"

"என் இஷ்டம்!"

"சீக்கிரமாக ஆபீசுக்குப் போக வேண் மானால் சுருக்க எழுந்து பண் விடுகிறேன்."

"வே-ண்-டா-ம்!"

"இப்போ பால் சாப்பிட வில்லையா?" ...ன்றான் அவன்.

"இப்போ பால் சாப்பிடுங்கள்" என்று ...சால்லத்தான் அவன் நினைத்தான். ...க்கக் கலக்கமும், அவள் மனம் இருந்த ...யப்ப நிலைமையும் சேர்ந்து, சொல்ல ...ார்த்தை வேறு விதமாக்கி விட்டன.

"எனக்குப் பசிக்க வில்லை.'

"எதற்காகப் பாதி ராத்திரியில் என் ...னுடு சண்டை பிடிக்கிறீர்கள்? அக்கம் ...க்கத்தில் தூங்குகிறவர்கள் எழுந்து ...ிக்கப் போகிறார்கள்!" என்று செல்ல ...கக் கண்டித்தாள்.

நாராயணனுக்கும் மனம் இந்த நிலையில் ...ன் இருந்தது என்று சொல்ல முடிய ...ல்லை. பேசாமல் படுக்கையைச் சுருட்டி ...டுத்துக் கொண்டு விடுவிடென்று ...ாடிக்குப் போய் விட்டான். ருக்குவும் ...டித்தால் எல்லாம் சரியாய் விடும், சமா ...னப்படுத்திவிடலாம் என்று நினைத்துப் ...க்கப் போய்விட்டாள்.

ஆனால் காலையில் நடந்ததே வேறு. எட்டு ...ணி வரையில் தூங்கும் நாராயணன், அவ ...ர அவசரமாக எழுந்து, ஸ்நானம் பண்ணி ...டை உடுத்திக் கொண்டு எட்டு மணிக் ...ுன்னாலேயே ஆபீசுக்குக் கிளம்பிவிட்டான். ...ி செய்ததுப் போல அன்று பால்கார ...ும் அதற்குள் வரவில்லை. நாராயணன் ...ளம்பிக் கொண்டிருக்கும்போது, ...த்து நிமிஷத்தில் பால்காரன் வந்து ...ிடுவான்; காப்பியாவது சாப்பிட்டு ...ட்டுப் போங்களேன்!" என்று கொஞ் ...ம் குரலில் ருக்கு மன்றாடினாள்.

"ஒன்றும் வேண்டாம்!" என்று ...வளைப் பாராமலேயே பதில் சொல்லி ...ிட்டுக் கதவைப் படாரென்று சாத் ...திக்கொண்டு அவன் சென்றுவிட்டான்.

ருக்குவுக்குத் துக்கம் நெஞ்சை ...டைத்துக் கொண்டது. வாய் விட்டு ...ழவேண்டும் போல் தோன்றியது. ...ஷயம் எவ்வளவு பிரமாதமாக முற்றி ...ிட்டது என்று அவளுடைய குழந்தை ...னத்துக்கு அப்போதுதான் புரிந்தது.

அன்று வரையில் அவர்களுக்குள் ...ன்ன 'ஊடல்' இருந்தாலும் நாரா ...ணன் ஆபீசுக்குப் போவதற்குள் ...ல்லாம் சரியாகிவிடும். ஆபீசுக்குப் ...ோகும்போது, "போய் வருகிறேன், ...ோய் வருகிறேன்" என்று திரும்பத் ...ிரும்பப் பதினைந்து தடவை சொல்லிக் கொண்டு, ரொம்ப மனமில்லாமல், ஆபீசுக்கு நாழியாகி விடுகிறதே யென்று புறப்பட்டுச் செல்லுவான். ருக்குவும் தயங்கித் தயங்கி, "ஜாக்கிரதையாய்ப் போய் வாருங்கள், ஆபீஸ் விட்டதும் சுருக்க வந்து விடுங்கள்!" என்றெல்லாம் சொல்லி வழி விட்டு, அவன் தலை மறையும் வரையில் ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டு நிற்பாள். நாராயணனும் மூலைத்திருப்பம் வரை அடிக்கொருதரம் திரும்பிப் பார்த்துக் கொண்டே செல்வான். அந்தவையவிடம் இன்று எவ்வளவு வித்தியாசம்! அதை நினைத்துப்பார்க்கவே அவள் மனம் கூசியது.

அன்றிரவு நாராயணன் வீட்டுக்குத் திரும்பியபோது இரவு 8-30 மணிக்கு மேலாகிவிட்டது. தான் வெளியில் சாப்பிட்டாகிவிட்டது என்பதை ருக்குவுக்குப் பறையடிப்பதுபோல் வாய் நிறைய வெற்றிலையைக் குதப்பிக்கொண்டு வந்தான்.

'இரவாவது சாப்பிட வருவார்' என்று ருக்கு இலேசாக நம்பிக்கை வைத்திருந்தாள். போதும் போதாததற்கு, நாராயணனுக்குப் பிடிக்குமே என்று சண்டைக்காய்ப் பொடி வேறு பண்ணியிருந்தாள். வந்தவன் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் உடையை மாற்றிக்கொண்டு படுக்கையைத் தூக்கிக் கொண்டு மாடிக்குப் போனான் என்றால் ருக்குவுக்கு எப்படி இருந்திருக்கும்! இந்த



மாதிரி தன்னை உயிரோடு சித்திரவதை செய்வதைவிட நெருப்பில் போட்டுப் பொசுக்கினால் கூடத் தேவலையே என்று நினைத்தாள்.

திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டவள்போல் விரைந்து சென்று கூடத்தில் மாட்டியிருந்த நாராயணன் கோட்டுப் பைகளில் கையை விட்டுத் துழாவினாள். அவன் தனக்காகப் புஷ்பம் வாங்கி வந்திருக்கிறானா என்று பார்க்கத்தான். அவளுடைய மனம் இருந்த நிலைமையில் அவளுக்குப் பூ இல்லாமல் ஒன்றும் குறைந்து விடவில்லை. வாங்கி வரவில்லை என்பது ஸ்பஷ்டமாகத் தெரிந்ததும், அவளுக்கு விஷயம் கொஞ்சமும் சந்தேகமில்லாமல் தெளிவாகி விட்டது. அன்று வரையில் தான் தவறினாலும் நாராயணன் கதம்பம் வாங்கி வரத் தவறினது கிடையாது. வேண்டுமென்றேதான் அன்று பூ வாங்கி வராமலிருந்திருக்க வேண்டும். அவனுக்குத்தான் தன் மனைவி சம்பந்தப்பட்ட மட்டில் ஞாபக மறதி என்பது கிடையாதே! "பார், உன்மேல் எனக்கு எவ்வளவு வெறுப்பு!" என்று அவளிடம் வெளிப்படையாகச் சொல்வதற்குப் பதில்தான் இந்த மாதிரி வகையில் காண்பித்திருக்கிறான்!

அதற்கு மேல் ருக்குவால் தாங்கமுடியவில்லை. தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விசித்து விசித்துக் குழந்தைபோல் அழுதாள். இரவு எவ்வளவு நேரத்துக்குப் பின் தூங்கினாள் என்று அவளுக்கே தெரியாது. காலையில் எழுந்ததும் தலையணை பூராவும் கண்ணீர்க் கறை படிந்திருப்பதைப் பார்த்தாள். ஒருக்கால் தூங்கும்போதுகூட இந்த அபாக்கியவதியின் கண்கள் நீரைச் சொரிந்து கொண்டிருந்தனவோ என்று அவளுக்குச் சந்தேகம் ஏற்பட்டது.

வீட்டு வேலைக்காரிகூட ருக்குவை ஒரு மாதிரியாகக் குறுக்கு விசாரணை செய்ய ஆரம்பித்ததுதான் அவளுக்குப் பொறுக்கவில்லை. சாதம் வடித்த கஞ்சி குறையாமல் தன் கைக்கு வந்து சேருவதையும், வீட்டு ஐயா இரண்டு நாளாய்க் காலை எட்டு மணிக்குள் ஆபீசுக்குப் போய்விடுவதையும் பார்த்த அவளுக்கு விஷயம் புரிய அதிக நேரம் பிடிக்கவில்லை. "எம்மா, ஐயா ஆட்டுலே சாப்பிடறதில்லையா? நீங்களும் ஐயாவும் முன் மாதிரி பேசிக்கிறதுகூட இல்லையே! என்னம்மா, புருசன் எதனாச்சும் சொன்னாக்கூட பின்ன விசயத்தைப் பெரிசாக்கக் கூடாதம்மா! இப்படித்தான் கோடி வீட்டம்மா......" என்று ஏதே[...] தன் அனுபவ முத்திரையோடு அ[...] புத்திசொல்ல ஆரம்பித்து விட்ட[...] ருக்கு அவளை இடைமறித்தாள். அவளு[...] சாக்கைப் பிடுங்கிக் கொண்டு சா[...] போலிருந்தது. "சரி, சரி; என் வ[...] தெரிச்சலை நீ ஒருத்தி கொட்டிக் கொ[...] ளாததுதான் பாக்கியிருந்தது. அ[...] ஆகிவிட்டது!" என்று சீறி விழுந்தாள்.

தன் கணவனின் முரட்டுப் பிடிவா[...] வளர்ந்து கொண்டே வருவதை எப்படி[...] தடுப்பது என்று யோசித்து யோசித்[...] தான் ஆபீசுக்குக் கடிதம் எழுதுவது எ[...] விசித்திர முடிவுக்கு அவள் வந்தாள். [...] தத்தை எழுதி வேலைக்காரியிடம் கொ[...] துத் தபாலில் சேர்க்கச் செய்தபிறகுதா[...] அவள் மனம் கொஞ்சம் ஆறுதலடைந்த[...]

• • •

வீட்டுக்குப் போனதும் நாராய[...] னுக்கு இன்னொரு எதிர்பாராத சந்தோ[...] மும் காத்திருந்தது. கல்கத்தாவிலிரு[...] அவனுடைய அக்காவும் அத்திம்பே[...] குழந்தைகளோடு வந்திருந்தார்கள். தம்[...] வரவைப் பற்றி அவர்கள் முன்னதாகவே[...] தந்தி கொடுத்திருந்தார்களாம். அ[...] இந்தக் காலத்தில்தான் தந்தி கொடு[...] மனிதர்கள் ஊர் வந்து சேர்ந்த பி[...] அவர்கள் அடித்த தந்தி வருவதென்ப[...] சகஜமாய் விட்டதே!

நாராயணனுக்கோ ருக்குவுக்கோ [...] அவர்கள் வருவது தெரியாது. ருக்கு தன[...] குச் சமாதான உடன்படிக்கைக் [...] தம் எழுதி விட்டாலும், சமாதானத்[...] எப்படி நடைமுறையில் ஆரம்பிப்ப[...] என்ற மகத்தான பிரச்னை நாராய[...] னுடைய மூளையை வருத்திக் கொ[...] டிருந்தது. அக்காவும் அத்திம்பேரும் வ[...] தில் அந்தச் சிரமம் நீங்கி விட்டது. ருக்[...] வும் பெண்களுக்கே உரிய இயற்[...] சாமர்த்தியத்தோடு ஏதும் அறியாத[...] போல் சகஜமாக இருந்து விட்டாள். அ[...] காப்பி கொண்டு வந்து கொடுத்த[...] வாங்கிக் கொண்டு, நாராயணன் புஷ்பத்[...] எடுத்துக் கொடுத்தான். அதைக் கை நீட்[...] வாங்கின ருக்குவின் இதழ்க் கடை[...] தோன்றிய புன்னகையில் வெற்றிப் பெ[...] மிதமும் குறும்புத்தனமும் துள்ளிக் கு[...] தன. நாராயணனும் விட்டுக் கொடுக்கா[...] எடுத்ததற்கெல்லாம் "ருக்கு, ருக்கு" என்று கூப்பிட்டுக் கொண்டிருந்தான்.

அத்திம்பேர் தம் மனைவியிடம், "பாரடி த்தக் காலத்துப் பிள்ளைகளை! அந்தக் லத்தில் உன்னை நான் பார் எதிரிலாவது ளைச் சொல்லிக் கூப்பிட்டால் உடம்பை பிரம் வக்கிரமாக வளைத்துக் கொண்டு டுவாயே!" என்று தம் மனைவி யையும், நாராயணனையும் ஒருங்கே கேலி ண்ணினார்.

சாப்பிட்டுவிட்டு எல்லோரும் ரொம்ப ழி பேசிக் கொண்டிருந்தார்கள். அத்திம் ர் தூக்கம் வருகிறதென்று படுக்கப் ான பிறகுதான் நாராயணனுக்குத் தன் ச்சினை இன்னும் முழுதும் தீர்ந்தபாடில்லை ு தெரிந்தது. எல்லாரும் படுக்கப் ாய் விட்டதும் ருக்குவோடு தனித் துக்கும்போதுதான் அவளிடம் எப்படி க்து சொல்வது என்பது புரியவில்லை. வனுக்குச் சந்தர்ப்ப விசேஷத்தால் பட்ட இந்தச் சமாதானம் தற்காலிக னதுதான்; நிலைமை மாறினவுடன் சமா னமும் காலாவதியாகி விட்டதென்று ன் நினைத்தான். ருக்கு தன் பிழையை ர்த்து, நேராக வந்து தன்னிடம் ன்னிப்புக் கேட்டாலொழிய, தன் பிடி த் தளர்த்தக் கூடாதென்று சட்ட ியாக வியாக்கியானம் பண்ணிக் ண்டான்.

தாளம் பழையபடி கட்டவிழ்த்துக் ண்டு முருங்க மரம் ஏறிக் கொண்டு ட்டது. நாராயணன் பழையபடி படுக் கையைத் தூக்கிக் கொண்டு மாடிக்குச் சென்று படுத்துக் கொண்டான்.

பௌர்ணமி நிலா அன்று பாலைப் பொழிந்து கொண்டிருந்தது. நாராயண னுக்குத் தூக்கமா வரும்!

மெட்டிகளின் குலுக்கலும், வளையல் களின் கலகலவென்ற சத்தமும் ருக்குவின் வருகையை அறிவித்தன. நாராயணன் உஷாராய்க் கண்களை மூடிக்கொண்டு தூங்குவது போல் பாசாங்கு செய்தான்.

ருக்கு அவன் பக்கத்தில் வந்து நின்று கொண்டாள்.

தன் கன்னத்தில் ஜலம்போல இரண்டு சொட்டு விழுந்ததும் நாராயணனுக்குக் கண்ணை மூடிக் கொண்டிருக்க மனம் இடம் கொடுக்கவில்லை. ருக்குவை இதுவரையில் படுத்தின பாடு போதாதா, இன்னும் அவள் எதற்காக அழவேண்டும்! கண்ணைத் திறந்து பார்த்தான்.

நாராயணன் தான் கண்ட காட்சியில் லயித்து தன்னை மறந்துவிட்டான். அவன் பரம ரசிகன். அவனுடைய அழகுணர்ச்சி அவன் ஆண்மையை வெற்றி கொண்டு விட்டது என்றே சொல்ல வேண்டும். கையில் பால் டம்ளருடன் அவள் நின்றிருந்த மோகனக் காட்சி அவனுக்குப் பாற் கடலி லிருந்து அமுதத்தை ஏந்தி வரும் தெய்வ கன்னிகையை நினைப்பூட்டியது. அழகு சொட்டும் முகத்தில் புன்னகை பளிசிட

லாவண்யமாக அவள் நின்றிருந்தது, ஒரு மகா கவி அழகுத் தெய்வம் தனக்குக் காட்சி கொடுத்ததைச் சாகா வரம் பெற்ற வரிகளில் இசைத்திருக்கிறானே, அதைப் போல இருந்தது. ருக்கு அழுதது என்பதை அவன் இதுவரையும் கவனிக்கவில்லை என்பதல்ல; இன்று அவள் இன்னும் கவர்ச்சியோடு விளங்குகிறாள் என்று அவன் நினைத்தான். இது சென்ற நாட்கள் பிரிந்திருந்த தன் காரணமாக ஏற்பட்ட சல வாதமா, அல்லது அவள் அழகுதான் நிஜமென்று அதிகரித்து விட்டதா என்று அவனால் திட்டமாகச் சொல்ல முடியவில்லை.

"என்ன ருக்கு, அழுதாயா என்ன? உன் கன்னத்தின்மேல் ஏதோ சொட்டுச் சொட்டாக விழுந்ததே! அசடே, எதற்காக அழவேண்டும்?" என்று மெள்ள ஆரம்பித்தான்.

"அழவும் இல்லை, ஒன்றும் இல்லை. இப்போதானே வந்தேன், அதற்குள்ளாகவா தூங்கிவிட்டீர்கள் என்று பார்க்கத்தான் விரலால் பாலை எடுத்து விட்டேன்! திரும்பவும் கோபித்துக் கொண்டுவிடப் போகிறீர்கள்!"

"சீ, கழுதை! கேலியைப் பார்க்கல்லை, கேலியை! நீ அழுதாயோ என்று என் மனம் துடிக்கிறது. ஆனால், நீயோ சாவகாசமாகப் பாலை எடுத்து விட்டேன் என்கிறாயே!"

"ஆமாம், ஆமாம். இவ்வளவு கரிசனமுள்ளவர்தானே என்னைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் இருந்தீர்கள், இந்த நாலு நாளாய்! நான் எவ்வளவு அழுதிருந்தாலும உங்களுக்கு என்ன தெரிந்திருக்கும்!" என்றாள்.

வாஸ்தவம்; பேச்சு வாக்கில் ருக்கு ஒரு பாணத்தையே அவன் மேல் வீசிவிட்டாள். நாராயணனுக்கும் தான் செய்தது தப்பு என்று தோன்றி விட்டது.

"ருக்கு, ருக்கு! இப்படி உட்கார்! நான் உன்னை அழவிட்டுத் திரும்பிக்கூடப் பார்க்காமலிருந்தது தப்புத்தான்! ஆனால் நீதான் கொஞ்சம் அன்று தாழ்ந்து போயிருந்தால் என்ன? நான் என்ன, அப்படி உன் கஷ்டசுகம் தெரியாத......"

"என்னை நீங்கள் பேசவிட்டால்தானே என் கட்சியைச் சொல்ல முடியும்!"

"சரி பேசு, நீயே பேசு! ஆனால் இதற்கு மட்டும் பதில் சொல்லி விடு. அன்று நான் என் நண்பனைக் கூப்பிட்டு வராமலிருந்தால் சாதம் உனக்கும் இருந்திருக்கும், சாப்பிட்டுத்தானே இருப்பாய்......?"

"நீங்கள் சொல்வதே பேச்சு! நிஜ சொல்றேன்: எனக்கு அன்று சா வேண்டியிருக்கவில்லை. உங்கள் சிநே வராமலிருந்தால்கூட அன்று நான் க யம் சாப்பிட்டிருக்க மாட்டேன். என சாதம் பிடித்துச் சாப்பிட்டு, இருபது களாகின்றன. இப்போதுகூடச் ச என்று நினைத்தாலே குமட்டிப் பி கிறது......!"

"அப்படியென்று என்னிடம் சொல் கூடாதா? டாக்டரிடம் கூட்டிக் கொ போயிருப்பேனே இல்லையோ?"

"ஐயோ, இப்படியும் ஒரு அப்பாவி இ போவா! இந்த உடம்புக்கு எந்த டாக் என்ன பண்ண முடியும்!" என்று பே பேச முடியாமல் லஜ்ஜையினால் முகத் கவிழ்த்துக் கொண்டாள்.

நாராயணனுக்கு விஷயம் இப்போது புரிந்தது. ஆவேசம் வந்தவன்போல் சென்று எழுந்து படுக்கையில் உட்கார் கொண்டான்.

"ருக்கு, நீ ஸ்நானம் பண்ணாமல் கிறாயா? நான் எவ்வளவு அசடு! உன் இந்தமாதிரி நிலைமையில் எவ்வளவு கஷ் படுத்தி விட்டேன்! இதோ பார், என் உனக்குக் கோபமா?" என்று அவ கவிழ்ந்த தலையை நிமிர்த்தினான்.

"சரி, சரி; பாலைச் சாப்பிட்டு விட் தூங்குங்கள். விடிந்தால் ஆபீஸ் உ உங்களால் கண் விழிக்கமுடியாது!' எ ருக்கு பாசமும் கேலியுமாகக் க பரிகசித்தாள்.

"என்ன சொன்னே! தூங்கவா! இ தம்பதிகள் குறட்டை விட்டுக் கொ தூங்குவதற்கா சந்திரன் இப்படி நில சொரிந்து கொண்டிருக்கிறான்? இ வா!" என்று வாஞ்சையோடு அவ தன் பக்கமாக இழுத்துக் கொண்ட நாராயணன்.

ஆகாய வீதியில் ஜம்மென்று பவனி கொண்டிருந்த சந்திரனின் காதிலும் விழுந்திருக்க வேண்டும். அப்போது ஏ பட்ட மோகத்தில் அவன் புகுந்து கொ டான். இந்தப் பூலோக வாசிகளான தம்பதிகளுக்குத் தானும் சளைத்தவ என்று நினைத்தான், அவ பௌர்ணமி நிலவை வீணாக்க விரும்ப தன் பிரியை ரோகிணியைத் தே கொண்டு போயிருக்க வேண்டும்!





# நீல நிறக் கல்

ராஜி

ஒரு சிறிய கிராமத்தில் ஓர் ஏழைச் சிறுவன் இருந்தான். அவன் ஒருநாள் உல்லாசமாக நடந்து போகும்போது, 'பளிச்' என்ற ஒரு வஸ்துவைக் கண்டெடுத்தான். அது அவரை விதையைப் போல் இருந்தது. "இது ஏதோ மந்திர சக்தியுள்ள வஸ்துவாகத்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் இவ்வளவு அழகான நீலவர்ண முள்ளதாகவும், பளபளப்பாகவும் இருக்குமா!" என்று எண்ணிக்கொண்டே, அவன் அந்தக் கிராமத்திலிருந்த 'பஸ் ஸ்டாண்'டிற்கு வந்தான். அங்கே பஸ்களில் ஏறுபவர்களும் இறங்குபவர்களுமாக ஒரே கூட்டமாக இருந்தது.

"இங்கே வருபவர்கள் எல்லோரும் எவ்வளவு நேர்த்தியான உடைகளை உடுத்திக் கொண்டு வருகிறார்கள்! என் கையில் இருக்கும் இந்தக் கல் மாத்திரம் நான் நினைத்ததைக் கொடுப்பதாக இருந்தால், இப்பொழுது எனக்கு விலை உயர்ந்த ஆடைகளைக் கொடுக்கட்டுமே!" என்று அவர்களைப் பார்த்ததும் அந்தச் சிறுவன் நினைத்துக் கொண்டான்.

அதற்குள் எல்லா பஸ்களும் கிளம்பி விட்டபடியால் அங்கே ஒரு மனிதரும் தென்படவில்லை. சிறுவன் சுற்றுமுற்றும் பார்த்தான். அவன் உட்கார்ந்திருந்த பெஞ்சியின் மேல் ஒரு சிறிய பெட்டி இருந்தது. "இந்தப் பெட்டி இங்கே எப்படி வந்தது?" என்று எண்ணிக்கொண்டே சிறுவன் அந்தப் பெட்டியைத் திறந்தான். என்ன ஆச்சரியம்! அந்தப் பெட்டிக்குள் ஒரு பளபளப்பான ஜரிகை வேஷ்டி, ஓர் உயர்ந்த சட்டை, மேலே போட்டுக் கொள்ளும் ஒரு மெல்லியதான ஜரிகை உத்தரீயம், கால்களுக்கு அணியும் 'பூட்ஸ்' எல்லாம் இருந்தன. அவற்றையெல்லாம் பார்த்ததும் சிறுவனுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. "ஆஹா! நான் கண்டெடுத்த கல் நினைத்ததைக் கொடுக்கும் வஸ்துவாகத்தானிருக்க வேண்டும்!" என்று சொல்லிக் கொண்டே, சிறுவன் புதிய ஆடை அணிகளினால் தன்னை அலங்கரித்துக் கொண்டான். தன்னுடைய பழைய ஆடைகளை. "இனி மேல் எனக்கு இவை யெல்லாம் வேண்டாம்!" என்று விட்டெறிந்து விட்டு வீடு திரும்பினான்.

அவனைக் கண்ட தாயார், "இது என்ன, இது! இவ்வளவு உயர்ந்த ஆடைகள் உனக்கு எப்படிக் கிடைத்தன?" என்று விசாரித்தாள். சிறுவன் சந்தோஷத்துடன், "அம்மா, இதோ பார்! இதற்கெல்லாம் காரணம் இந்த நீல வர்ணமுள்ள வஸ்துதான்!" என்று நடந்தவை யனைத்தையும் விவரமாகச் சொன்னான். அதைக் கேட்ட தாயாரும் சந்தோஷமடைந்தாள்.

அன்று மாலை அவன் வாசலில் நின்று கொண்டிருந்தபோது, ஒரு போலீஸ்காரனுடன் யாரோ ஒருவன் பேசிக்கொண்டு போனான். "இன்று நான் அவசரமாகப் பஸ்ஸில் ஏறி விட்டேன். மறந்து போய் என் பெட்டியை 'பஸ் ஸ்டாண்'டிலிருந்த பெஞ்சியின் மேலேயே விட்டு விட்டேன். நீங்கள்தான் அதைக் கண்டு பிடித்துக் கொடுக்க வேண்டும்" என்று அந்த மனிதன் போலீஸ்காரனை வேண்டிக் கொண்டான்.

இதைக் கேட்ட சிறுவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. உடனே, "இந்த ஆடைகளை யெல்லாம் கழற்றிப் பெட்டியில் வைத்து அந்த மனிதரிடம் திருப்பிக் கொடுத்து விட்டால் என்ன?" என்று அவன் யோசித்

தான். ஆனால், அதற்குப் பதிலாகக் கட்டிக்கொள்ள அவனிடம் அப்போது ஒரு துணியும் இல்லை. தன் பழைய துணிகளைத்தான் அவன் 'பஸ் ஸ்டாண்டி'லேயே விட்டெறிந்து விட்டானே!

சிறுவனுக்குக் கண்களில் நீர் ததும்பிற்று. அவன் ஒன்றும் புரியாமல் தன் கையிலிருந்த நீல நிறமுள்ள வஸ்துவைப் பார்த்து, "என்னுடைய பழைய துணிகளைக் கொண்டு வா!" என்றான்.

அப்போது ஒரு கழுதை முதுகில் மூட்டையுடன் அந்த வழியே போய்க் கொண்டிருந்தது. சிறுவன் விட்டெறிந்த பழைய துணிகள் அதன்மீது இருந்தன. "என்ன அதிசயம் இது! இந்த நீல நிறமுள்ள வஸ்து நான் கேட்ட மாத்திரத்தில் என் பழைய துணிகளைக் கொண்டு வந்து விட்டதே!" என்று சிறுவன் சந்தோஷமடைந்து, மெதுவாகக் கழுதை மீதிருந்த தன் துணிகளை எடுத்து அணிந்து கொண்டான்.

அதற்கு மேல் ஒரு நிமிஷம்கூட அவன் தாமதிக்கவில்லை. உடனே தான் அணிந்திருந்த புதிய உடைகளைக் கழற்றிப் பெட்டியில் வைத்து மூடினான். அதை எடுத்துக்கொண்டு ஓடோடியும் சென்று, "இந்தாருங்கள், உங்கள் பெட்டி!" என்று போலீஸ்காரனுடன் சென்று கொண்டிருந்த அந்த மனிதரிடம் கொடுத்து விட்டான். அவரும் தம் பெட்டியைச் சந்தோஷத்துடன் பெற்றுக் கொண்டு சிறுவனை மிகவும் பாராட்டினார்.

மறுநாள் காலை தன் மகனைப் பழைய கோலத்தில் பார்த்த தாயார், "என்ன சமாசாரம்? எங்கே அந்தப் புதிய துணிகள்?" என்று கேட்டாள். சிறுவன் நடந்ததைச் சொன்னான்.

அதைக் கேட்ட தாயார், "நீ வைத்திருக்கும் நீலக் கல் கேட்டதைக் கொடுக்கக் கூடியது அல்ல; அது நிஜமாகவே மந்திர சக்தியுள்ள வஸ்துவாக இருந்தால் நம்மைப் பெரிய பணக்காரர்களாக மாற்றட்டுமே!" என்று சொல்லிக் கொண்டே, கோபத்துடன் அதைப் பிடுங்கி வாசலில் எறிந்தாள்.

அது தெருவில் போய்க் கொண்டிருந்த ஒரு சமஸ்தான உத்தியோகஸ்தரின்மீது படவே, அவர் அதை எடுத்துக்கொண்டு சிறுவனின் வீட்டுக்குள் நுழைந்தார். அவரைப் பார்த்த சிறுவனும் தாயாரும் பயந்து போய், "ஐயா! நாங்கள் விட்டெறிந்த வஸ்து தவறிப் போய்த் தங்கள் மீது பட்டுவிட்டது; மன்னிக்கவும்" என்று வேண்டிக் கொண்டார்கள்.

"தவறி விட்டதா! இதைத் தேடிக் கொண்டுதான் நான் ஊர் ஊராக அலைந்து வருகிறேன். இது சாதாரண கல் அல்ல; ராஜாவின் கிரீடத்தில் இருந்த விலையில்லா மாணிக்கம்! இதை ஏதோ தின்பண்டம் என்று எண்ணி ஒரு காகம் எடுத்துக் கொண்டு வந்து விட்டது. எப்படியோ இதைக் கண்டெடுத்துக் கொடுத்த உங்களுக்கு மிகவும் வந்தனம்!" என்று அந்த உத்தியோகஸ்தர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, வாசலில் சமஸ்தானத்தைச் சேர்ந்த ஒரு வண்டி வந்து நின்றது. அந்த வண்டியில் வித விதமான ஆபரணங்கள், ஆடைகள் பொற்குவியல்கள் எல்லாம் இருந்தன.

"இவை யெல்லாம் உங்களுக்குத்தான்! இந்த நீலக் கல்லைக் கண்டு பிடித்துக் கொடுப்பவர்களுக்கு நம் அரசர் இவற்றை யெல்லாம் வெகுமதியாக அளிக்கச் சொன்னார்!" என்று சொல்லி அந்த சமஸ்தான உத்தியோகஸ்தர் அவற்றை யெல்லாம் வாரி வாரி அவர்களிடம் கொடுத்தார்.



அவ்வளவுதான்; அன்று முதல் ஏழைச் சிறுவன் பணக்காரச் சிறுவனாக மாறினான்; ஏழைத் தாயாரும் தான் விரும்பியபடியே பணக்காரத் தாயாராக மாறி விட்டாள்!

# அபூர்வ மனிதன்

ஸோமாஸ்

கோதண்டராமன் மரச் சாமான்களிடம் விசேஷமான காதல் கொண்டிருந்தான். பீரோவும் கட்டிலும் மேஜையும் அவன் வீட்டில் விதவிதமாகக் காட்சியளிக்கும். அந்தச் சாமான்களை யெல்லாம் ஆறு மாதத்துக்கு ஒரு முறை ஏலம் போட்டு விட்டுப் புதுச் சாமான்களாக வாங்கி வீட்டில் நிரப்பி விடுவான். அதனால் அவன் வீட்டு மேஜை நாற்காலிகளெல்லாம் எப்பொழுதும் புத்தம் புதிதாகவே இருக்கும். இதனால் அவனுடைய அன்பர்க ளெல்லோரும் அவனுக்கு, 'பர்னிச்சர் பைத்தியம்' என்றே நாமகரணம் செய்திருந்தனர்!

'பர்னிச்சர்கள்' எந்த மூலையில் ஏலம் போட்டாலும் கோதண்டராமனை அங்கே நிச்சயமாய்க் காணலாம். மேல் நாட்டு நவீன நாகரிக 'பர்னிச்சர்'களுக் கெல்லாம் கோதண்டராமன் கேட்லாக் வாங்கி வைத்திருந்தான். அயல் தேசத்திலும் கடல் கடந்த பிரதேசங்களிலும்கூடக் கோதண்டராமனுக்குத் தெரியாத மரக் கம்பெனி கிடையாது.

கோதண்டராமன் வீட்டில் எத்தனையோ 'பர்னிச்சர்கள்' நிறைந்திருந்த போதிலும் அவன் மனத்தில் ஒரு குறை யிருந்தது. அது, ஒரு புதுமாதிரியான கண்ணாடி பீரோ வாங்கவேண்டும் என்பதுதான். அதற்காக அவன் எத்தனையோ கம்பெனிகளின் கேட்லாக்குகளை வரவழைத்திருந்தான். ஆனால் ஒரு கம்பெனியாவது அவன் விரும்பிய மாதிரியில் பீரோ வைத்திருக்கவில்லை.

இதனால் கோதண்டராமன் சோர்ந்து போய்விட வில்லை. "புதுமாதிரியான கண்ணாடி பீரோ தேவை" — என்று பத்திரிகையில் விடாமல் விளம்பரம் செய்தான். "விலையைப் பற்றி அக்கரையில்லை" என்று மறக்காமல் அந்த விளம்பரத்தில் குறிப்பு ஒன்றும் சேர்த்திருந்தான்.

அவனுடைய மனோ ரதம் நிறைவேறும் காலம் வந்து விட்டது; இல்லாவிட்டால் சமீபத்தில் 'நொடித்துப் போன' அந்த மரச் சாமான்கள் கம்பெனியிலிருந்து, அவர்கள் ஏலம் போடும் சாமான்களின் ஜாபிதா அவனுக்கு வந்திருக்காது. அப்படியே அது வந்திருந்தாலும் அதில் புது 'மாடல்' கண்ணாடி பீரோ இருந்திருக்காது.

கோதண்டராமனுக்குக் கேட்லாக்கைப் பார்த்ததும் சந்தோஷம் தாங்கவில்லை. மரச் சாமான்களின் படங்களும் அந்த ஜாபிதாவில் கண்டிருந்ததுதான் அவனது சந்தோஷத்தை உச்ச நிலைக்குக் கொண்டு போயிற்று. ஏனென்றால் அவன் வெகு நாட்களாக விரும்பும் புது மாடல் பீரோவும் அதில் இருந்தது.

மறுநாளே, கோதண்டராமன் பணமும் கையுமாக ஏலம் போடும் இடத்தில் பிரசன்னமா யிருந்தான்.

அங்கே மாபெருங் கூட்டம் கூடி யிருந்தது. ஏலம் போடுபவன் மேஜை, நாற்காலி, கட்டில் முதலிய பல மரச் சாமான்களை ஏலம் போட்டான். கடைசியில் அந்தக் கண்ணாடி பீரோவை ஏலம் கூறும் சந்தர்ப்பம் வந்தது.

"நல்ல 'ரோஸ் வுட்' பீரோ. அழுத்தமான பெல்ஜியம் கண்ணாடியுடன் கூடியது. புது மாடல். விலை ரூபா எழுபத்தைந்து!" என்று ஏலம் போடுபவன் உச்சஸ்தாயியில் கூறினான்.

உடனே "எண்பது ரூபாய்!" என்றான் கோதண்டராமன்.

"எண்பது ரூபாய்! எண்பது ரூபாய்!" என்று ஏலம் போடுபவன் கட்டைக் குரலில் கூவினான்.

"தொண்ணூறு ரூபாய்!" என்று கனம் மிருந்த பெண் குரல் ஒன்று கூட்டத்தி லிருந்து கேட்டது.

"தொண்ணூறு ரூபாய்! தொண்ணூறு ரூபாய்!" என்றான் ஏலம் போடுபவன்.

"நூறு ரூபாய்!" என்றான் கோதண்டராமன் அழுத்தமான குரலில்.

அந்த இளமங்கை "நூற்றுப் பத்து ரூபாய்!" என்றாள் புன்னகை பூத்த முகத்துடன்.

"நூற்றிருபது ரூபாய்!" என்றான் கோதண்டராமன்.

கன்னையின் குரல் "நூற்றுமுப்பது ரூபாய்!" என்றது.

கோதண்டராமனின் பிடிவாதமான குரல் "நூற்றுநாற்பது ரூபாய்!" என்றது.

குமரியின் குறும்புக் குரல், "நூற்றைம்பது ரூபாய்!" என்றது.

இப்படியே அந்த வைசாகசியப் பெண்ணும் கோதண்டராமனுமாகத் தொகையை ஏற்றிக்கொண்டே போயினர். கூட்டத்தில் பூரண அமைதி நிலவியிருந்தது. ஜனங்கள் ஒரே உற்சாகத்துடன் அவர்களையே கவனித்துக் கொண்டிருந்தனர். அந்த பீரோவை வாங்கும் நோக்கம் அங்கே கூடியிருந்த அனைவருக்கும் இருந்தது என்றாலும், கோதண்டராமனும் அந்தப் பெண்ணும் விடாப்பிடியாய்ப் போட்டி போட்டது அவர்களுக்கெல்லாம் மிகவும் சுவாரஸ்யமாயிருந்தது. ஆகையினால், அவர்களெல்லோரும் கோதண்டராமனையும் அந்தப் பெண்ணையுமே கவனித்தனர்; யாருமே விலை கேட்கவில்லை.

இருநூற்று நாற்பது ரூபாயுடன் அந்தப் பெண்மணி நின்றுவிட்டாள்.

கோதண்டராமன் இருநூற்றைம்பதுக்குக் கேட்டான். ஏலம் போடுபவன் கொடுத்துவிட்டான்.

இதுவரையில் ஆத்திரமும் ஆவேசமும் கலந்திருந்த கோதண்டராமன் முகத்தில் விவரிக்க முடியாத ஒருவித அசட்டுக் களையும் தென்பட ஆரம்பித்தது. குப்பென்று வியர்த்துவிட்டது அவனுக்கு; சட்டைப் பையில் கையை விட்டவன் பேந்தப் பேந்த விழித்தான்.

"ஏன்? வரும் வழியில் எங்கேயாவது முடிச்சுமாறியிடம் பணத்தைப் பறிகொடுத்து விட்டீர்களா?" என்று கேட்டாள் அந்த அழகி. அவள் குரலில் அபரிமிதமான ஆதரவும் இனம் தெரியாத இன்னும் ஏதோ ஒன்றும் கலந்திருந்தன. ஆமாம், அப்படித்தான் கோதண்டராமன் நினைத்தான்!

"ஆமாம்.........இல்லை......! என்னிடம் இருநூறு ரூபாய்தான் இருக்கிறது! அதனால்தான்......!" என்று வாக்கியத்தை முடிக்காமல் கோதண்டராமன் இழுத்தான்.

"இவ்வளவுதானே? இதற்குத்தானே இப்படி விழிக்கிறீர்கள்? நான் தருகிறேன் ஐம்பது ரூபாய். பீரோவை எடுத்துக் கொண்டு போங்கள்! நீங்கள் வெகு நாட்களாகக் 'காதல்' புரியும் பீரோவை விட்டு விட்டுப் போவது சரியல்ல!" என்று கூறி விட்டுக் கோதண்டராமனை ஒரு குறும்புப் பார்வை பார்த்துவிட்டு அந்தப் பெண் பணத்தை எடுத்தாள்.

"இல்லை; இல்லை. நான் வீட்டுக்குப் போய்ப் பணம் எடுத்து வந்துவிடுகிறேன்!" என்று கோதண்டராமன் நாக் குழறக் கூறினான். ஆனால் அந்தப் பெண் அவன் பேச்சைப் பொருட்படுத்தினதாகத் தெரியவில்லை. அவன் கையில் இருந்த பணத்தை அவளே வாங்கித் தன் பணத்தையும்சேர்த்து ஏலம் போடுபவனிடம் சேர்த்து விட்டாள்.

கோதண்டராமன் மந்திர சக்தியில் கட்டுண்ட நாகம் போல நின்றான்.

"நீங்கள்......ரொம்ப சிரமம் எடுத்துக் கொண்டு விட்டீர்கள். நீங்கள்...!" என்று ஏதேதோ பேசினான் கோதண்டராமன்.

"பாதகமில்லை; எனக்கு நேரம் ஆகிறது. தியாகராயநகரில் நீலகண்டமேத்தா தெருவில் 'நில்குஞ்' என்னும் பங்களாவுக்கு வந்தால் சாவகாசமாய்ப் பேசலாம்!" என்று கூறி விட்டு, அவனுடைய பதிலுக்குக் காத்திராமல் வேகமாய் அந்தப் பெண் வெளியேறினாள்.

கோதண்டராமனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. அவனும் பீரோவைத் தன் வீட்டுக்கு அனுப்பச் சொல்லி, வீட்டு விலாசம் கொடுத்து விட்டு அவ்விடத்தை விட்டு நகர்ந்தான்.

அன்று முதல் கோதண்டராமனுக்கு ஏற்பட்டிருந்த மரக் காதல் மாறி அவ்விடத்தில் வேறொன்று முளைத்தது. அந்தப்



கடைக்காரன் (கோர்ட்டுக்குப் போகும் வக்கீலைப் பார்த்து):—ஸாமி! வாங்க, வாங்க! நல்ல விலை போட்டு எடுத்துக்கிறேன்!

பெண்ணின் முகமும் அவள் குறும்புச் சிரிப்பும்தான் எங்கும் நிறைந்து நின்றன. ஏலம் போட்ட இடத்தில் அவள் பீரோவின் விலையை ஏற்றிக் கொண்டே போனபோது கோதண்டராமனுக்கு அவள்மீது கோபம் பிரமாதமாய் வந்தது. ஆனால், கடைசியில் அந்தக் கோபம் மறைந்தது. அராபிக் கதைகளில் வரும் சம்பவங்களைப் போல் இதுவும் ஒரு பிரமையோ என்றுகூட அவன் மனம் சிந்தித்தது.

எது எப்படியிருந்தாலும் அந்தப் பெண்ணை அவள் கொடுத்த விலாசத்துக்குப் போய்ப் பார்ப்பது என்ற முடிவை அவன் மாற்றிக் கொள்ளவில்லை.



‘‘தொண்ணூறு ரூபாய்! தொண்ணூறு ரூபாய்!’’

அந்தப் பங்களாவுக்குப் போன பிறகுதான் அந்தப் பெண்ணின் பெயரைக் கேட்டுத் தெரிந்து கொள்ளாதது எவ்வளவு பெரிய முட்டாள்தனம் என்பது கோதண்டராமனுக்குத் தெரிந்தது.

‘‘வாருங்கள், உட்காருங்கள்!’’ என்று அன்பும் மரியாதையும் ஒருங்கே தொனிக்க, அழைத்துக் கொண்டே ஒரு பெரியவர் வாசல் பக்கம் வந்தார். கோதண்டராமனும் பதிலுக்கு வந்தனம் செலுத்திவிட்டு, அவருடன் உள்ளே சென்று உட்கார்ந்தான்.

‘‘என்ன மிஸ்டர், கோதண்டராமன்! இன்னும் ஏதாவது புதிய ‘பர்னிச்சர்’களுக்கு ஆர்டர் செய்திருக்கிறீர்களா?’’ என்று கேட்டார் அந்தப் பெரியவர்.

‘‘இல்லை...... என் பெயர் உங்களுக்கு எப்படி......?’’ என்று கோதண்டராமனை மேலே பேச முடியாமல் ஆச்சரிய உணர்ச்சியினால் தவித்தான்.

‘‘உங்கள் பெயர் எனக்கு வெகு நாட்களாகத் தெரியுமே! ஏன், ‘பர்னிச்சர்’ கம்பெனிகளுக்கெல்லாம் உங்கள் பெயர் நன்றாய்த் தெரியும்!’’ என்றார் பெரியவர்.

கோதண்டராமனால் அச்சமயம் ஒன்றும் பேச முடியவில்லை. அது அவன் தவறல்ல. திடீரென்று அங்கே தோன்றிய அந்தப் பெண்ணின் தவறுதான்.

‘‘ஹலோ, மிஸ்டர் கோதண்டராமன்! இன்றைக்குத்தான் எங்கள் வீட்டுக்கு வர வழி தெரிந்ததாக்கும்!’’ என்றாள் அந்தக் குறும்புக்காரப் பெண்.

‘‘ஆமாம்......இரண்டு மூன்று நாட்களாகவே வரவேண்டும் என்றுதான் எண்ணம். ஆனால் அவகாசம்தான் கிடைக்கவில்லை!’’ என்றான் கோதண்டராமன்.

‘‘ஏன்? இன்னும் ஏதாவது புதிய ‘பர்னிச்சர்’களுக்காக அலைகிறீர்களாக்கும்!’’ என்றாள் அந்தப் பெண்மணி.

‘அதெல்லாம் இல்லை......உம்......அது இருக்கட்டும். என் பெயர் உங்களுக்கு எப்படித் தெரிந்தது?’’

‘‘நீங்கள் மரச் சாமான்களுக்காகப் பத்திரிகையில் செய்த விளம்பரங்களைப் பார்த்திருக்கிறேன். அதனால் உங்கள் பெயரைத் தெரிந்து கொள்ளச் சந்தர்ப்பம் கிடைத்தது. அன்று அந்த பீரோ ஏலம் போட்ட இடத்தில் உங்களை நேரில் காணும் பாக்கியமும் கிடைத்தது. மரச் சாமான்கள் மேல் இவ்வளவு பிரேமையுள்ள அபூர்வ மனிதரைப் பார்க்க வேண்டும் என்னும் என் வெகு நாளைய ஆவலும் அன்றுதான் தணிந்தது. நீங்கள் மரச் சாமான்களின் மேல் கொண்டிருக்கும் பிரேமையின் ஆழத்தை அறிந்து கொள்ள வேண்டும் என்னும் ஆவலினால்தான் அன்று அப்படி அந்த பீரோவின் விலையை ஏற்றிக் கொண்டே போனேன். ஆனால், அடேயப்பா! அன்று நீங்கள் கொஞ்சங்கூடச் சளைக்கவில்லையே! அதனால் என்மீது உங்களுக்குக் கோபமா?’’ என்று கேட்டாள் அந்தப் பெண்.

‘‘கோபமா! அதெல்லாம் ஒன்றும் இல்லை. ஆனால் எனக்கு ஒரே ஒரு வியப்

வத்தில்தான் வருத்தம். உங்கள் பெயரை நீங்கள் எனக்குச் சொல்லாததுதான் அதற்குக் காரணம்."

"என் பெயர் கலா! இனிமேல் உங்கள் மனதில் கவலை ஒன்றும் இருக்க நியாயம் இல்லையே!"

இப்படி அவர்களிருவரும் பேசிக் கொண்டிருக்கும்போது உள்ளே சென்றிருந்த அந்தப் பெரியவரும் வந்தார்.

"என்ன மிஸ்டர் கோதண்டராமன், உங்களோடு கொஞ்சம் பேச வேண்டும். அன்று ஏலம் போட்ட கம்பெனி என்னுடையதுதான். வியாபாரத்தில் கொஞ்சம் நஷ்டம் ஏற்பட்டு விட்டது. கெட்ட பெயர் வராமல் இருப்பதற்காக அந்தக் கம்பெனிச் சாமான்களை யெல்லாம் ஏலம் போட்டு விட்டேன். ஒரு புதிய 'பர்னிச்சர்' கம்பெனி ஆரம்பிக்கலாம் என்று உத்தேசித்திருக்கிறேன். மரச் சாமான்களின் நுணுக்கம் தெரிந்த ஒருவருடைய ஒத்துழைப்பு எனக்கு வெகு நாட்களாகத் தேவையாயிருந்தது. நீங்கள் வந்து சேர்ந்தீர்கள். அதற்குக் காரணம் என் பெண் கலாதான். அவள்தான் உங்களை 'பர்னிச்சர்' பித்தை யறிந்து உங்களை எப்படியாவது அழைத்து வர வேண்டும் என்று மிகவும் முயற்சி யெடுத்துக் கொண்டாள். உங்களுக்கு என்னுடன் சேர்ந்து வியாபாரம் செய்வதில் விருப்பம்தானே?" என்று கேட்டார். கோதண்டராமனின் மனோ நிலை அப்போது எப்படி யிருந்தது என்பது கலாவின் தகப்பனுக்குத் தெரியாது. ஆனால் கலாவுக்குத் தெரியும். கலாவின உபசாரமான குறும்பையும் பண் கலந்த பேச்சும்தான் அவனை அந்த இடத்தை விட்டே அசைய வொட்டாமற் செய்து விட்டனவே! அந்த நிலையில், அவன், கலாவின் தகப்பனார் விதிக்கும் எந்த விதமான கடும் நிபந்தனைக்கும் உட்படத் தயாரா யில்லாம லிருப்பானா, என்ன?

• • •

'பர்னிச்சர்' பைத்தியம் கோதண்டராமனைக் கண்டு பிடித்தது தம் புதிய கம்பெனிக்குத் துணையாக ஏற்படுத்திக் கொண்ட கலாவின் தந்தை அத்துடன் நின்றுவிடவில்லை; அவனையே தம மகள் கலாவுக்கும் வாழ்க்கைத் துணையாக ஏற்றுக் கொண்டார்.

பீரோவை ஏலம் எடுத்த தினத்தில் கலா கோதண்டராமனுக்கு ஐம்பது ரூபாய் கொடுத்திருந்தாளே அல்லவா? அதைத் திருப்பிக் கொடுக்க வேண்டிய அவசியமே அதற்குப் பிறகு அவனுக்கு ஏற்படவில்லை. இப்பொழுதெல்லாம் அவனுடைய சம்பாத்தியம் முழுவதும்தான் அவளைச் சேர்ந்து விடுகிறதே!

---

## கலியாண வீட்டில்!



"என்ன ஸார், இது? பொழுது விடிந்ததும் விடியாததுமா தலையில் துணியைப் போட்டு மூடிக்கொண்டு போறேளே?"

"என்ன ஸார் பண்றது? இன்னும் எத்தனையோ பேர் தூங்கிண்டு இருக்கா! தவறி எவனாகிலும் விழித்துக்கொண்டு என் முகத்தில் விழிப்பான், அப்புறம் நாள் பூராவும் என்னைத் தூற்றிக்கொண்டே இருப்பான்! அதற்குத்தான் முகத்தை இப்படி மூடிக்கொண்டு போகிறேன்!"

# கம்பர் தரும் காட்சி

## 184. சொல்ல வந்த வாய் மூடிவிட்டது!

டி.கே.சி

சீதையை ராவணன் தூக்கிக் கொண்டு போனான் என்ற செய்தியை ராமனிடம் சொல்வதற்குப் பயந்தான் ஜடாயு. ஏதோ திக்கித் திக்கி "யாருக்கும் கஷ்டம் வருவது இயல்பு; இருக்கட்டும். அரக்கர் குலத்தைக் களைந்து நன்றாய் வாழ்வாயாக!" என்று வாழ்த்தியது போல்ப் பேசி நிறுத்தினான்.

ஜடாயு பயந்தபடியே ராமன் உள்ளம் கொதிப்படைந்து, கோப வெறி உண்டாகி, அலற ஆரம்பித்து விட்டான்.

'பெண்தனி ஒருத்திதன் னைப்
பேதைவான் அரக்கன்பற் றிக்
கொண்டனன் ஏக,நீ இக்
கோளுறக், குறுங்கல்செய் யா
வண்திசை இறுதியா ன
உலகங்கள் இவற்றை இன் னே,
கண்டவா னவர்களோ டும்
களையுமா(று) இன்றுகாண் டி.'

[பெண்தனி ஒருத்தி தன்னை: தனியாக இருக்க நேர்ந்த ஒரு பெண்ணை; பேதைவான் அரக்கன்: மிக்க மூர்க்கனான வான் எத்திய ஒரு அரக்கன்; பற்றிக் கொண்டனன் ஏக: எடுத்துக் கொண்டு போக; நீ இக் கோள் உற: நீயும் இந்த மாறுதலுக்கு உள்ளாக; குறுங்கல் செய்யா, வண்திசை இறுதியான: குறுங்கி நொறுங்கிப் போயிருக்க வேண்டும். அப்படிப் போகாத எட்டுத் திசைகளையும் முட்டி யுள்ள; உலகங்கள் இவற்றை: இதோ தெரிகிற உலகங்களை; இன்னே: இந்த க்ஷணமே; கண்டவானவர்களோடும்: இதை வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிற தேவர்கள், அவர்களையும் சேர்த்து; களையுமாறு இன்று காண்டி: இதோ. களைந்து விடுகிறேன் பார்!—அரக்கர் மாத்திரம் அல்ல; தேவர்களையுந்தான்!]

பார்த்தான் ஜடாயு: "அடடா, இந்த ராமனுக்குக் கோபவெறி எப்படி உண்டாய் விட்டது! மூன்று லோகத்தையும் அழித்து விட்டுத்தான் அடங்கும் போலிருக்கிறதே, இதை எப்படித் தணிக்கிறது!" என்று திகைத்தவனாய் அப்படியே இருந்து விட்டான்.

சிறிது நேரங் கழித்து ஒரு யோசனை தென்பட்டுப் பேச ஆரம்பிக்கிறான்:

"உலகத்திலுள்ளவர்களையோ தேவர்களையோ வேறு யாரையோ குற்றஞ் சொல்ல என்ன இருக்கிறது? நம்மைத்தான் நொந்து கொள்ள வேண்டும்."

'வம்பிழை கொங்கைவஞ் சி
வனத்திடைத் தமியள்வைகக்,
கொம்பிழை மானின்பின் போய்க்
குலப்பழி கூட்டிக்கொண் டீர்:
அம்பிழை வரிவில்செங் கை
ஐயன்மீர்! ஆயுங்கா லை
உம்பிழை என்பதல் லால்,
உலகஞ்செய் பிழையுமுண் டோ?'

[வம்பிழை கொங்கை வஞ்சி: வார் அணிந்த கொங்கையோடு கூடிய பூங்கொடி போன்ற சீதை; வனத்திடைத் தமியள் வைக: காட்டில் தனியாக இருக்க; கொம்பிழை மானின் பின் போய்: அழகாகக் கொம்பமைந்த மானின் பின் போய்; குலப்பழி கூட்டிக் கொண்டீர்: உங்கள் குலத்துக்கே பழியை உண்டாக்கிக் கொண்டீர்கள் நீங்கள் இருவரும்; அம்பிழை வரிவில் செங்கை ஐயன்மீர்: அம்பு தொடுக்கும் வில் ஏந்திய வீரர்களே, அரசிளங் குமாரர்களே! ஆயுங்காலை: கொஞ்சம் ஆராய்ந்து பார்த்தால்; உம் பிழை என்பதல்லால்: நீங்கள் செய்த பிழை என்றுதானே ஆகும்; அப்படிக்கு அல்லாமல் உலகத்தார் பிழை செய்தார்கள் என்று ஏற்படுமா?

குறிப்பு:—ராமனுடைய கோப வெறியைத் தீர்ப்பதற்கு வேறு வழியில்லாமல் கடுமையான இந்த வார்த்தைகளை ஜடாயு உபயோகிக்கிறான். இந்த வார்த்தையால் ராமன் மனது புண்படும் என்பது தெரியும். தெரிந்திருந்தாலும், அதுதான் கோப வெறிக்கு மருந்து என்று எண்ணிச் சொல்லுகிறான். மிகத் துணிவும் தந்திரமும் கலந்துள்ள பாவனை. வார்த்தையிலுள்ள காரத்தை இதப்படுத்துவதற்காக, ராமன் ஒருவனைப் பார்த்துச் சொல்லாமல் இருவரையும் பார்த்துப் பேசுகிறான். லக்ஷ்மணனையும் சேர்த்துச் சொன்னது ஒரு நல்ல உபாயம்.]

ஜடாயுவின் வார்த்தை ராமனது இதயத்தில் போய்த் தைத்து விட்டது. அதன் மூலமாகத் தலைக்கேறிய கோபவெறி இறங்குகிறது.

கோப வெறியைத் தணிப்பதற்காகவே ஜடாயு இவ்வாறு சொன்னான் என்று ராமனும் தெரிந்துகொண்டான். ஜடாயுவைப் பார்த்துச் சொல்லுகிறான் ராமன்:

“ஐயனே! உன் அருமை வாயால் கோபங் கொள்ளாதே என்று சொல்லுகிறாய்: அப்படியே செய்வதா, அல்லது எனக்கு மற்றொரு செயல் ஏதாவது இருக்கிறதா?”

இவ்வாறு சொல்லி விட்டு, மெள்ளக் கேட்கிறான் ராமன். கொஞ்சம் பயந்தே கேட்கிறான்:

**ஆயபின் அமலன்தா னும்,**
**‘ஐயநீ அமைதிஎன் ன**
**வாயிடை மொழிந்ததன் றி**
**மற்றொரு செயலும்உண் டோ!**
**போய(து)அவ் அரக்கன்எங் கே**
**புகல்’எனப்,—புள்ளின்வேந் தன்**
**ஓய்வினன் உணர்வுந்தே ய,**
**உரைத்திலன், உயிரும்நீர்ந் தான்.**

[ஆயபின்: கோபத்தை விடப்பா என்று ஜடாயு சொல்ல, அப்படியே ராமனுக்குக் கோபமும் தணிந்தபின்; அமலன் தானும்: ராமனும்; ஐய நீ அமைதி என்ன: ஐயனே, என்னைப் பார்த்துக் கோபம் கொள்ளாதே என்று; வாயிடை மொழிந்ததன்றி: வாய் திறந்து சிரமத்தோடு சொன்னதை யல்லாமல்; மற்றொரு செயலும் உண்டோ: செய்வதற்கு வேறொரு செயலும் உண்டோ: போயது அவ் அரக்கன் எங்கே புகல் என: நீ சொன்ன அரக்கன் எங்கே போனான் என்பதைத் தயவு செய்து சொல்ல வேண்டும் என்று சொன்ன மாத்திரத்தில்; என்ன நேர்ந்தது? புள்ளின் வேந்தன் ஓய்வினன் உணர்வும் தேய: ஜடாயு மிக்க அசதியுற்று உணர்வும் இழந்தவனாய்; உரைத்திலன்: பேச முடியாமல் போய்விட்டது; உயிரும் நீர்ந்தான்: உயிருமே போய்விட்டது.]

விஷயத்தைச் சொல்ல வேண்டும் என்று, அதாவது ராவணன் வந்து சீதையை இலங்கைத் தீவுக்கே எடுத்துக் கொண்டு போய் விட்டான் என்று சொல்ல ஜடாயு எண்ணியதில் குறைவில்லை. ஆனாலும், அதைச் சொல்ல மனசு துணியவில்லை. கோப வெறியிலிருந்த ராமனுடைய மனசைத் தந்திரமாய்ப் பக்குவப் படுத்திக் கொண்டு மெள்ளச் சொல்லலாம் என்று எண்ணி யிருந்தான். விதி என்ன செய்தது? அப்படிச் சொல்லி முடிப்பதற்குள் அவனது உயிரை வாங்கிவிட்டது. ராம லக்ஷ்மணர்களுக்கு விஷயம் ஒன்றும் தெரியாமலப் போய்விட்டது. விதியின் கொடுமையா, கேலியா இது!

ஜடாயு உயிர் நீங்கினான் என்பதை அறிந்தான் ராமன். அப்படியே மூர்ச்சையாகி விழுந்தான். லக்ஷ்மணன் ஆறுதலான வார்த்தைகளைச் சொன்னான். அதன் பேரில் அயர்வு நீங்கிப் பேசுகிறான் ராமன்:

“இப்படி யெல்லாம் நம்முடைய கஷ்டங்களை எண்ணித் துன்புறுவது சரியல்லதான்!” என்று சொல்லி, வடிந்து கொண்டிருந்த கண்ணீரைத் துடைத்துக் கொள்ளுகிறான்.

**அவ்வழி இளவல் கூ ற,**
**அறிவனும் அயர்வுநீங் கி**
**இவ்வழி இனையஎண் ணின்**
**ஏழமைப் பாலதென் று**
**வெவ்வழி பொழியுங்கண் ணீர்**
**விலக்கினன்; ‘விளிந்ததா தை**
**செவ்வழி உரிமையாவும்**
**திருத்துவம் சிறுவ!’ என்றான்.**

[அவ்வழி இளவல் கூற: ஆறுதலான வார்த்தைகளை லக்ஷ்மணன் சொன்னான்; அதனால் அறிவனும் அயர்வு நீங்கி: விஷயத்தை அறிந்து கொள்ளக் கூடிய ராமனும் அயர்வு நீங்கி; இவ்வழி இனைய எண்ணின் ஏழமைப் பாலது: வாஸ்தவந்தான் அப்பா, இந்த மாதிரியான காரியங்களை எண்ணிக் கொண்டே இருந்தால் பிசகுதான்; என்று சொல்லி. வெவ்வழி பொழியும் கண்ணீர் விலக்கினன்: மிக்க கொதிப்போடு பொழியும் தன் கண்ணீரைத் துடைத்தவனும் லக்ஷ்மணனைப் பார்த்து: விளிந்த தாதை செவ்வழி உரிமை யாவும்: இறந்த அந்த ஜடாயுவாகிய தந்தைக்கு முறைப்படி ஈமக் கடன்களை யெல்லாம்; திருத்துவம்: செய்வோம்; சிறுவ என்றான்: தம்பியே என்று சொன்னான்.]

ஈமக் கடன்களைச் செய்தும் முடித்தார்கள்.

பறவையைப் பறவையாகக் கொள்ளாமல் மனுஷனிலும் மனுஷனாகச் செய்து காட்டும் கவிஞர் திறம் அபூர்வமானது.

(ஆரணிய காண்டம் முடிகிறது)

# கட்டிலைக் காப்பாற்றினர்!
























# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த் | மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

பதினேழாம் அத்தியாயம்

## ரத்தன் வந்தாள்!

ஒன்பது நாட்கள் ஓடிவிட்டன. ரமாநாத் தினம் பொழுது விடிந்ததும் ஆபீஸுக்குப் புறப்பட்டுப் போய் விடுவான். விளக்கு ஏற்றியபின் தான் திரும்பி வருவான். முதல் நாள் கிடைத்த வரும்படியைப் போல் அவனுக்கு அப்புறம் கிடைக்கவே இல்லை. இருந்தாலும் அந்த ஒன்பது நாட்களுக்குள் அவன் நூறு ரூபாய் சேர்த்து விட்டதைப் பாராட்டாமல் இருக்க முடியாது. அவன் அந்தப் பணத்திலிருந்து ஒரு தம்பிடிகூட எடுத்துச் செலவழிப்பதில்லை. பத்மா எத்தனையோ தடவை அவனை 'உலாவப் போய் வருவோம்' என்று கூப்பிட்டிருக்கிறாள். அவன் அவளுக்கு ஏதாவது சால்சாப்புச் சொல்லித் தப்பித்துக் கொண்டிருக்கிறானே தவிர, அவளுடன் ஒரு நாளைக்காவது உலாவப் போனதில்லை. ரத்தனுக்கு அவன் குறிப்பிட்டிருந்த கெடு நெருங்கிவிட்டது. இன்னும் ஒரே ஒரு நாள் தான் பாக்கி இருந்தது. நாளைக்குப் பொழுது விடிந்ததும் ரத்தன் வந்து, “‘கங்கணத்தைக் கொண்டு வா’ என்று கழுத்தை அறுக்க ஆரம்பித்துவிடுவாளே! என்ன செய்வது?' என்ற கவலை அவனை வாட்ட ஆரம்பித்தது. ஆகையால் அவனுக்கு ஆபீஸ் வேலை செய்யவே ஓடவில்லை. கடைசியில், “'இன்னும் ஒரு மாதம் பொறுத்துக் கொள்' என்று அவளிடம் சொல்லிப் பா'ப்போம். அவள் கேட்டால் போயிற்று! இல்லையென்றால் 'தட்டான் உன் பணத்தைத் திருப்பிக் கொடுத்தால் தானே! நான் என்ன செய்வது?' என்று கையை விரித்து விடுவோம்” என்ற முடிவுக்கு அவன் வந்து விட்டான்.

அது ஆவணி மாதம்; கைபெழுத்து மறைந்து விட்ட நேரம். 'ரமேஷ்பாபுவின் வீட்டுக்குப் போய்ச் சிறிது நேரம் சதுரங்கம் ஆடிவிட்டு வரலாமே' என்று எண்ணி ரமாநாத் வாசலில் வந்தான். வானத்தில் மேகங்கள் குழுமியிருந்தன. அதைக் கண்ட அவன், 'மழை வந்துவிட்டால் என்ன செய்வது?' என்று சற்றுத் தயங்கினான். அதற்குள் ரத்தன் வந்து விட்டாள். எப்பொழுதுமே சிரித்த முகமாக இருக்கும் அவளிடத்தில் ஒருவிதக் கடுகடுப்புத் தாண்டவமாடியது. 'இன்றைக்கு அவள் தயவு தாட்சண்யத்தை யெல்லாம் மூட்டை கட்டி வைத்துவிட்டு, சண்டைக்கென்றே வரிந்து கட்டிக் கொண்டு புறப்பட்டு வந்திருக்கிறாளோ!' என்று கூடத் தோன்றியது.

பத்மா அவளைக் கண்டதும் மகிழ்ச்சியுடன், “வா, ரத்தன்! நல்ல சமயத்துக்கு நீயும் வந்தாய்! இப்பொழுதெல்லாம் இவர் 'எங்கேயாவது போய்விட்டு வருவோமே!' என்று கூப்பிட்டால் 'வரவே மாட்டேன்' என்கிறார். 'தலை தூக்க நேரம் இல்லை. அவ்வளவு வேலை கிடக்கிறது!' என்கிறார். வா, நீயும் நானும் எங்கேயாவது போய் விட்டு வருவோம்” என்று அழைத்தாள்.

ரத்தன் வெறுப்பாக, "உன்னுடன் சுற்றிக் கொண்டிருக்க இப்பொழுது எனக்கு நேரமில்லை. 'இவர் சொன்ன கெடு, நாளைக்கு!' என்பதை ஞாபகப் படுத்தி விட்டுப் போவதற்காகத்தான் வந்தேன்!" என்றான்.

ரமாநாத் அவனைக் கண்டதுமே சிங்கத்தைக் கண்ட யானையைப்போல வெல வெலத்துப் போய்விட்டான். 'எப்படியாவது அவனைத் திருப்தி செய்து அனுப்பி விட வேண்டுமே!' என்ற எண்ணத்துடன், அவன் "எனக்கு ஞாபகமில்லையா, அதற்கு? இப்பொழுதுதானே அவனுடைய கடைக்குக் கூடப் போய்விட்டு வருகிறேன். நான் கடைக்குப் போய் ஒரு மணி நேரம், இரண்டு மணிநேரம் உட்காராத நாளே கிடையாது. வேலை நடந்து கொண்டிருக்கிறது. இழைப்பு வேலையோ, இல்லையோ? அதனால்தான் கொஞ்சம் தாமதமாகிறது. வேலை முடிய இன்னும் பத்துப் பதினைந்து நாட்கள் பிடிக்கும் போலிருக்கிறது!" என்றான்.

ரத்தன் அதற்குச் சிறிதும் நெகிழ்ந்து கொடுக்கவில்லை. "இன்னும் பத்துப் பதினைந்து நாட்கள் ஆகுமா? போதும், போங்கள். எனக்குக் கங்கணமும் வேண்டாம், கிங்கணமும் வேண்டாம். என் பணத்தைத் திருப்பி வாங்கித் தந்து விடுங்கள், போதும்!" என்றான்.

"நான் பத்துப் பதினைந்து நாள் என்று சொல்லுகிறேனே தவிர, அவ்வளவு நாள் பிடிக்காது. இன்னும் இரண்டு மூன்று கல்புதைத்து விட்டு, மெருகு கொடுக்க வேண்டியதுதான் பாக்கி!" என்றான் ரமாநாத்.

"இனிமேல் என்னால் பொறுக்க முடியாது. எனக்குக் கங்கணமே வேண்டாம் என் பணத்தைத் திருப்பி வாங்கிக் கொடுத்து விட்டு மறு காரியம் பாருங்கள். உங்கள் சாக்சாப்பும், ஏமாற்று வித்தையும் எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை" என்று சற்றுக் காரமாகவே ரத்தன் சொன்னான்.

'ஏமாற்று வித்தை' என்ற சொல்லைக் கேட்டதும் ரமாநாத் திகைத்துவிட்டான். "'என் முட்டாள்தனத்தை என்னவென்று சொல்லுவது? நான் போய் இந்தத் தொல்லையில் எல்லாம் மாட்டிக் கொள்ளுவானேன்? முன் பணம் கொடுத்தால் சீக்கிரம் செய்து தந்து விடுவானுக்கும்' என்று எண்ணிப் பணத்தைக் கொண்டு போய் அவனிடம் கொடுத்தேனே! என் புத்தியைத்தான் செருப்பால் அடிக்கவேண்டும். நீங்களோ 'பணத்தைக் கொண்டு வந்தால்தான் ஆயிற்று!' என்கிறீர்கள். அவனோ பணத்தைத் திருப்பித் தரப் போவதில்லை. இரண்டு பேருக்கும் நடுவில் மாட்டிக்கொண்டு, நான் விழிக்க வேண்டியிருக்கிறது! எல்லாம் என் போதாத காலம்!" என்றான்.

ரத்தன் அவனைக் கூர்ந்து பார்த்தவாறு, "ஏன், நம் பணத்தைத் திருப்பித் தருவதற்கு அவனுக்கு என்ன வலிப்பு?" என்று கேட்டான்.

"உங்களுக்காகச் செய்த நகையை அவன் யாரிடம் கொண்டுபோய் விற்க முடியும்? நீங்களே சொல்லுங்கள். எல்லா



ருக்குமே ஒரே மாதிரியான நகை பிடிக்குமா?" என்று கேட்டான் ரமாநாத்.

ரத்தன் புருவத்தை நெரித்துக்கொண்டு, "அதெல்லாம் எனக்குத் தெரியாது. அவன் நாளைக் கடத்தினான்; அதற்கான தண்டனையையும் அவன் அனுபவிக்க வேண்டியது தான். ஒரே வார்த்தை; நாளைக்குள் எனக்குக் கங்கணமோ, பணமோ இரண்டில் ஒன்று கிடைத்துவிட வேண்டும். உங்களுக்குக் கடைக்காரன் வேண்டியவனு யிருந்தால், அவனிடம் உங்களால் கண்டித்துக் கேட்க முடியவில்லை யென்றால், அவன் கடையை எனக்குக் காண்பித்துவிடுங்கள்; அப்படிக் காண்பிக்கச் சங்கோசமா யிருந்தால் அவன் பெயரையாவது சொல்லுங்கள், நான் கண்டுபிடித்துக் கொள்ளுகிறேன். நல்ல வேடிக்கை இது! அவன் கடையையே ஏலத்துக்கு விட்டு, அவனை ஜெயிலுக்கும் அனுப்பி வைக்கவில்லை யென்றால் என் பெயர் ரத்தன் இல்லை. இந்தப் போக்கிரிகள் எல்லாம், நடந்துகொள்ளுகிற படி நடந்து கொண்டால்தான் வழிக்கு வருவார்கள்!" என்றாள்.

ரமாநாத் ஒன்றும் புரியாமல் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு, தரையையே உற்று நோக்கலானான். அவன் எந்தக் கெட்ட வேளையில் ரத்தனிட மிருந்து பணத்தை வாங்கிக் கொண்டானோ? இவ்வளவு சிரமத்துக்குள்ளாக வேண்டி வந்து விட்டது! சும்மா இருந்தவனுக்கு எதற்குத்தான் இந்தத் தொல்லைகள் எல்லாம் வந்ததோ?

"இவன் சொல்லுவதும் நியாயம்தானே? நீங்கள் ஏன் இவனையும் கடைக்காரனிடம் அழைத்துக்கொண்டு போகக் கூடாது?" என்று கேட்டாள் பத்மா.

"நான்தான் 'எனக்குக் கங்கணம் வேண்டாம்' என்று சொல்லிவிட்டேனே!" என்றாள் ரத்தன்.

ரமாநாத் குரலில் ஒருவித நடுக்கம் தொனிக்க, "சரி, உங்களுக்குப் பணம் தானே வேண்டும்? நாளை சாயந்திரத்துக்குள் கிடைத்து விடும்" என்றான்.

"நாளைக்கு எப்பொழுது கிடைக்கும்?"

"சாயந்திரம் ஆபீஸிலிருந்து திரும்பி வரும் பொழுது வாங்கிக் கொண்டு வந்து விடுகிறேன்."

"பூரா ரூபாயையும் கொடுத்து விட வேண்டும். ஒன்று, இரண்டு என்று என்னை அலைக்கழிக்கக் கூடாது!"

'நான்தான் சொல்லி விட்டேனே! உங்கள் ரூபாய் பூராவையும் நாளைக்கு நீங்கள் வாங்கிக்கொண்டு போய் விடலாம்" என்று சொல்லி விட்டு ரமாநாத் தன் அறைக்கு வந்துவிட்டான். பிறகு ரமேஷ் பாபுவின் பெயருக்கு ஒரு கடிதம் எழுதிக் கோபிநாத்தின் கையில் கொடுத்து, "ரமேஷ்பாபுவிடம் இதைக் கொடுத்துப் பதில் வாங்கிக் கொண்டு வா!" என்றான்.



பிறகு அவன் இன்னுமொரு கடிதம் எழுதி விசுவம்பராத்தின் கையில் கொடுத்து, மாணிக்கதாஸிடம் போய் வரச் சொன்னான்.

"மழை வருகிறதே, அண்ணா!" என்றான் விசுவம்பராத்.

"வந்தால் வரட்டும். உலகம் முழுகிப் போய்விடாது. ஒரே ஓட்டமாகப் போய் விட்டு வா!"

"அவர் வீட்டில் இல்லை யென்றால்...?"

"இருப்பார்! இந்த வேளையில் அவர் எங்கும் போக மாட்டார்!" என்றான் ரமாகாந்.

வாழ்க்கையில் இன்றுதான் முதன் முதலாக ரமாகாந் தன்னுடைய நண்பர்களிடம் கடன் கேட்டான். தனக்குத் தெரிந்த வரையில் வெகு பணிவாகவும், வினயமாகவும் அவன் தன் கடிதங்களில் சொற்களைக் கையாண்டிருந்தான். கடன் கேட்பது என்பது அவனுக்கு இதுதான் முதல் அநுபவம். அவன் எழுதியது போலவே எத்தனையோ கடிதங்கள் அவன் பெயருக்கு வந்திருக்கின்றன. அந்தக் கடிதங்களைப் படித்து அவன் மனம் உருகியிருக்கிறான்; ஆனால் வேறு வழியின்றி ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லித் தப்பித்துக்கொள்ளத்தான் அவனால் முடிந்தது; ஒருவருக்காவது உதவி புரிய முடியவில்லை. அதைப் போல ரமேஷ்பாபுவும் ஏதாவது சால்சாப்புச் சொல்லிவிடுவாரோ? அவருக்கு வரும்படி அதிகம்; செலவு குறைச்சல். அவர் மனம் வைத்தால் ஏதாவது ஏற்பாடு செய்து விடலாம். என் விஷயத்தில் அவர் இந்தச் சலுகை காட்ட மாட்டாரா, என்ன? போன இரண்டு பையன்களும் இன்னும் ஏன் திரும்பி வரவில்லை?

இவ்வாறு சிந்தித்தவாறே அவன் வாசற் புறத்தில் இங்கும் அங்கும் நடமாடிக் கொண்டிருந்தான். ரத்தனுடைய கார் இன்னும் நின்றுகொண்டிருந்தது. இந்தச் சமயம் ரத்தன் வெளியே வந்தான். அவன் உலாவிக் கொண்டிருந்ததைப் பார்த்தும், அவன் அவனிடம் ஒன்றும் பேசாமல் காரில் போய் ஏறி உட்கார்ந்தான். காரும் புறப்பட்டு விட்டது.

இத்தனை நேரம் இரண்டு பேரும் எங்கே தங்கி விட்டார்கள்? எங்கேயாவது விளையாடக் கிளையாடப் போயிருப்பார்களா? இரண்டும்கெட்டான்கள்! கொடுத்த வேலையைச் சரியாகச் செய்யவில்லை! ரமேஷ்பாபு பணம் கொடுத்துவிட்டால் நல்லதாயிற்று! ......... அவரிடம் போய் இருநூறு ரூபாய் கேட்டேனே! அவ்வளவு ரூபாய் அவரிடம் இல்லாமல் இருந்து விட்டால்?...பாவம், அவரைத்தான் அவருடைய வேட்டகத்தார்கள் கழுகுபோலக் கொத்தித் தின்று விடுகிறார்களே!...... மாணிக்கதாஸ் நினைத்தால் வெகு சுலபமாக ஆயிரம் இரண்டாயிரம் வேண்டுமானாலும் கொடுக்கலாம். என்ன ஆகிறது, பார்ப்போம்! 'இன்றைக்கு மட்டும் இவர்கள் பணம் கொடுக்காமல் இருக்கட்டும், நாமும் 'நமக்கு எதற்கு இவர்களுடைய சகவாசம்? என்று விட்டு விடுவோம். நமக்கு உதவாத இவர்களுடைய பேச்சை நாம் எதற்குக் கேட்க வேண்டும்?' என்றெல்லாம் ரமாகாந் எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். யாருடைய காலடி ஓசையாவது கேட்டால் ரமாகாந்தின் மனம் 'திக் திக்' என்று அடித்துக்கொள்ளும். சத்தம் வந்த திக்கை நோக்கித் திரும்பித் திரும்பிப் பார்ப்பான்.

கடைசியில் விசுவம்பராத் திரும்பி வந்தான். மாணிக்கதாஸ், 'எனக்கும் இப்போது பண முடையாக இருக்கிறது. உன்னைக் கடன் கேட்கலாம் என்றிருந்தேன்' என்று எழுதியிருந்தான்.

ரமாகாந் அந்தத் தாளைக் கிழித்து எறிந்து விட்டான். 'நல்ல சுயநலக்காரப் பயல்களின் உலகம் இது! போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் பணம் கேட்டிருக்கட்டும், இந்தப் பயல் தானே பணத்தைத் தூக்கி கொண்டு ஓடுவான். இருக்கட்டும், இருக்கட்டும். நமக்கும் ஒரு சமயம் வராமலா இருக்கப் போகிறது? இன்றைக் கில்லாவிட்டால் என்றைக்காவது ஒருநாள் நம்மிடம் 'கைகட்ட இவன் வந்துதானே ஆகவேண்டும். அப்பொழுது பார்த்துக் கொள்ளுகிறேன்' என்று அவன் மனத்துள் முணுமுணுத்துக் கொண்டான்.

அதற்குள் கோபிநாத்தும் வந்து விட்டான். ரமேஷ் பாபு அவனிடம் கொடுத்தனுப்பியிருந்த கடிதத்தில், 'நான் வாழ்க்கையில் சில நியமங்களைக் கடைப்பிடித்து வருகிறேன். சிநேகிதர்களிடம் கொடுக்கல் வாங்கல் வைத்துக் கொள்ளுவதில்லை என்பதும் அவைகளில் ஒன்று. உனக்கு இன்னும் அநுபவம் போதாது. சிநேகிதர்களிடத்தில் கொடுக்கல்-வாங்கல் வைத்துக் கொள்ளுவது எப்பொழுதுமே தப்பு. அதுவே பெரிய மனஸ்தாபங்களுக்கெல்லாம் காரணமாகி விடுகிறது. இதை போகப் போக நன்றாக உணருவாய். எனக்கு மிகவும் வேண்டிய ஆப்த நண்

ஆகையால், உன்னிடம் விரோதத்தை விலைக்கு வாங்கிக்கொள்ள நான் தயாராக இல்லை. ஆகவே என்னை மன்னிப்பாயாக' என்று எழுதியிருந்தார்.

ரமாகாந் அந்தக் கடிதத்தையும் கிழித்தெறிந்தான். பிறகு அவன் பக்கத்திலிருந்த நாற்காலியில் போய் உட்கார்ந்துகொண்டு விளக்கையே உற்று நோக்கலானான்.

## பதினெட்டாம் அத்தியாயம்

## பாவம், பத்மா !

மாலை நேரம். முனிசிபல் ஆபீஸ் கட்டடத்தில் அமைதி நிலவிவிட்டது. ஆபீஸ் உத்தியோகஸ்தர்கள் ஒவ்வொருவராக வீட்டுக்குப் புறப்பட்டுப் போய்க் கொண்டிருந்தனர். வேலைக்காரன் அறைகளைச் சுத்தம் செய்ய ஆரம்பித்துவிட்டான். பியூன்கள் தங்கள் தங்கள் செருப்புகளை மாட்டிக்கொண்டு புறப்பட ஆயத்தமானார்கள். தட்டுக்காரர்கள் தங்கள் அன்றாட வரும்படியை எண்ணலாயினர். ஆனால் ரமாகாந் மட்டும் ரிஜிஸ்தரைத் திறந்து வைத்துக்கொண்டு ஏதோ எழுதிக் கொண்டிருந்தான்.

ரமாகாந் இன்றும் விடியற்காலையிலேயே ஆபீஸுக்கு வந்து விட்டான். ஆனால் அவனுக்கு அந்தப் பத்து ரூபாயை விட ஒன்றும் அதிகமாகக் கிடைத்துவிடவில்லை. 'தன் மானத்தைக் காத்துக் கொள்ள வேண்டும் என்றால் ஏதாவது 'தகிடுதத்தம்' செய்து ரத்னை ஏமாற்ற வேண்டும், வேறு வழியே இல்லை' என்று ரமாகாந்துக்குத் தோன்றியது. 'நாம் அவனுடைய பணத்தை எடுத்துச் செலவு செய்து விட்டதாகச் சந்தேகப்பட்டு, அவன் நம்மை இவ்வளவு அவசரப்படுத்துகிறான். அவனுடைய ரூபாய் கேட்ட மாத்திரத்திலேயே கிடைக்கும் என்ற நம்பிக்கையை அவனுக்கு ஊட்டிவிட்டால் நம்மை இவ்வளவு தொந்தரவு செய்ய மாட்டான்' என்பதை ரமாகாந் நன்கு உணர்ந்திருந்தான். ஆகவே அவன் குறித்த தவணையில் அவனிடம் எப்படியாவது பணத்தைக் காட்டி, அவனுடைய சந்தேகத்தை அறவே ஒழித்து விடுவது' என்ற முடிவுக்கு வந்துவிட்டான். அதனால்தான் அவன் 'கேஷியர்' வீட்டுக்குப் போவதை வெகு ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தான். அன்றைய வரும்படி எண்ணூறு ரூபாய் அவன் கைவசமிருந்தது. அதை எப்படியாவது வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போய்விடுவது என்ற எண்ணத்துடன் அவன் தன் நேரத்தைக் கடத்தலானான். சரியாக மணி நான்கு அடித்ததும் கேஷியர் எழுந்து விட்டார். ரமாகாந்திடமிருந்து அன்றைய வரும்படியைக் கேட்டு வாங்கி வைத்துவிட்டுத் தான் வீட்டுக்குப் போகவேண்டும் என்று நினைக்க அவருக்கு என்ன, அவ்வளவு பணமுடையா? பேசாமல் போனால் அவன் கொண்டு வரும் சில்லறைகளை வாங்கி எண்ணி வைத்துப் பூட்டுவதிலிருந்தாவது தப்பலாம் அல்லவா! நாள் பூராவும் கணக்கு எழுதி எழுதி, ரூபாய்களை எண்ணி எண்ணி அவர் இடுப்பு ஒடிந்துவிட்டது. ஆகவே அவர் பேசாமல் வீட்டுக்குப் புறப்பட்டு விட்டார். 'கேஷியர் ரொம்ப தூரம் போயிருப்பார்' என்பதை உணர்ந்த ரமாகாந் ரிஜிஸ்தரை மூடி வைத்தான். பிறகு பியூனைக் கூப்பிட்டு, "இந்தப் பணப் பையை எடுத்துக் கொண்டு வா! கேஷியரிடம் கொண்டு போய்க் கட்டிவிட்டு வரலாம்" என்றான்.

"கேஷியர் ஐயா புறப்பட்டுப் போயிட்டாங்களே!" என்றான் பியூன்.

ரமாகாந் வியப்புற்றவன் போலக் கண்களை அகல விழித்து, "கேஷியர் புறப்பட்டுப் போய்விட்டாரா? நீ ஏன் என்னிடம் முன்பே சொல்லவில்லை? எத்தனை தூரம் போயிருப்பார்?" என்று கேட்டான்.

"தெருத் திருப்பத்துக்குத்தான் போயிருப்பாங்க!"

"இன்றைய வரும்படியைக் கஜானாவில் எப்படிக் கட்டுவது?"

"அப்படியானால் ஓடிப்போய்க் கேஷியர் ஐயாவைக் கூப்பிட்டுக் கொண்டு வரட்டுங்களா?"

"போடா, போ! முன்னாலேயே சொல்லத் தெரியவில்லை, பாதி வழி போனவரைத் திருப்பிக் கூப்பிட்டுக் கொண்டு வருகிறேன் என்கிறாயே, முட்டாள்! சரி, பணத்தை இந்த டிராயரிலேயே வைத்துப் பூட்டி வைக்கிறேன். ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்" என்றான் ரமாகாந்.

"வேண்டாம், எசமான்! பணத்தை இங்கே வைத்துப் பூட்ட வேண்டாங்க

எசமான்! நம்மைப் பிடித்த போதாத காலம், ஏதாச்சும் கெடுதலாக நடந்து விட்டால் நான் மாட்டிக்கிட்டு விழிக்க ணுங்க. பூட்டு வேறே சரியா யில்லீங்க!" என்று கெஞ்சினான் பியூன்.

"அப்படியானால் இந்தப் பணத்தை நான் எங்கே வைப்பது?"

"நீங்கள் கையோடேயே எடுத்துப் போய் விடுங்கள், எசமான்!" என்றான் பியூன்.

ரமாநாத் விரும்பியதும் அதுதானே? உடனே அவன் ஒரு குதிரை வண்டியை அமர்த்திக் கொண்டு, பணப் பையுடன் வீட்டுக்குப் புறப்பட்டான்.

பத்மா பணப் பையைப் பார்த்ததும், "கங்கணம் கிடைக்க வில்லையா, என்ன?" என்று கேட்டாள்.

"இன்னும் வேலை முடிந்தபாடில்லை. உன் தோழிக்கு நம்பிக்கை ஏற்படமாட்டேன் என்கிறதே என்பதற்காகப் பணத்தை வாங்கிக் கொண்டு வந்து விட்டேன்!" என்றான் ரமாநாத்.



தமிழ் எழுத்தாளர்களுக்குக் கலை ஆர்வத்தை யூட்டி வரும் ஸ்ரீ ர. நா. தம் சகோதரரின் புதல்வி குமாரி வேதவல்லிக்கும் கலையின் ஆர்வத்தை யூட்டி யிருக்கிறார் என்ற விஷயம் சென்ற வாரம் 18-ல் மயிலாப்பூரில் குமாரி வேதவல்லியின் பரதநாட்டிய அரங்கேற்றம் என்று கேள்விப்பட்ட போது தெரிந்தது. அந்த அரங்கேற்றத்துக்கு தமது மேயர் டி. சுந்தரராவ் நாயுடு தலைமை வகித்து விழாவைச் சிறப்பித்தார்.

"கடைக்காரன் என்ன சொல்லுகிறான்?"

"அவன் என்ன சொல்லுவான்! இதோ, இன்றைக்கு, நாளைக்கு என்று ஏதோ சால்ஜாப்புச் சொல்லுகிறான். ஆமாம், ரத்தன் இன்றைக்கு வந்திருந்தாளோ?"

"இன்னும் வரவில்லை. வருகிற நேரம் தான்!" என்றாள் பத்மா.

கடையில் விளக்கு ஏற்றி வெகு நேரம் ஆகியும் ரத்தன் வராமற் போகவே, 'இனி அவள் வரமாட்டாள்' என்று ரமாநாத் எண்ணினான். ஆகவே அவன் பணத்தை எடுத்து வைத்துவிட்டு உலாவப் புறப்பட்டு விட்டான்.

அவன் உலாவப் போய்ப் பத்து நிமிஷம் கூட ஆகி யிராது; ரத்தன் வந்து விட்டாள். அவள் வந்ததும் வராததுமாகப் பத்மாவைப் பார்த்து, "கங்கணம் வந்து விட்டதோ?" என்று கேட்டாள்.

"வரவாவது, மண்ணாகப் போகவாவது! அவர் கால் தேய நடையாக நடந்தாரே, அதுதான் மிச்சம்!" என்றாள் பத்மா.

"நல்ல தட்டான் நமக்கு என்று வந்து சேர்ந்தான்! இப்படி யெல்லாம் பணம் சரியாகப் போகும் என்று தெரிந்திருந்தால், நான் பணம் கொடுத்தே யிருந்திருக்க மாட்டேன்!" என்றாள் ரத்தன் அவநம்பிக்கையுடன்.

அவளுடைய வார்த்தைகளைக் கேட்ட பத்மா வெகு எரிச்சலுடன், "உன் பணம் வைத்திருக்கிறது. எப்பொழுது வேண்டுமானாலும் எடுத்துக்கொண்டுபோ! தட்டான் கொடுக்கவில்லையென்றால் நாங்கள் என்ன செய்ய முடியும்?" என்றாள்.

"அப்படியானால் என் பணத்தைக் கொடுத்து விடு. நான் கங்கணம் செய்து போட்டுக் கொண்ட வரைக்கும் போதும்!" என்று ரத்தன் அலுத்துக் கொண்டாள்.

உடனே பத்மா எழுந்து 'விடுவிடு' என்று உள்ளே போனாள். அலமாரியிலிருந்து பணப் பையை எடுத்து வந்து ரத்தன் முன்னிலையில் வைத்து, "இதோ அம்மா, உன் பணம்! தாராளமாய் எடுத்துக் கொண்டு போ!" என்றாள்.

ரமாநாத் நினைத்தது சரியாகத்தான் இருந்தது. 'அவர்கள் தன் பணத்தை எடுத்துச் செலவழித்து விட்டார்களோ?' என்ற சந்தேகத்தில்தான் ரத்தன் பொறுமையிழந்து அவளை நச்சரிக்க ஆரம்பித்து விட்டாள். பணத்தைக் கண்டதும்

அவளுடைய சந்தேகம் பறந்து விட்டது. ஆகவே, அவள் சற்று கெட்டிப் போய், "இன்னும் நாலைந்து நாட்களுக்குள் அவன் கங்கணம் தந்து விடுவான் என்றால் பணம் உங்களிடமே இருக்கட்டுமே!" என்றாள்.

"அவன் அவ்வளவு சீக்கிரம் கொடுத்து விடுவான் என்று எனக்குத் தோன்றவில்லை. அவன் கங்கணம் செய்துகொண்டு வந்து கொடுத்து விட்டால், அப்புறம் உன்னிடமிருந்து பணத்தை வாங்கிக் கொள்ளுகிறோம்" என்றாள் பத்மா.

"அந்தச் சமயம் என்னிடம் பணம் இல்லாமல் இருந்துவிட்டால்? — பணம் வருகிறதே தவிர போகிற சுவடே தெரியவில்லையே! அதனால்தான் உங்களிடமே இருக்கட்டும் என்று சொல்லுகிறேன்" என்றாள் ரத்தன்.

"இங்கேயும் அதே நிலைமைதான்! அதுவும் பிறருடைய பணத்தை வாங்கி வைத்துக் கொள்ளுவது ரொம்பத் தப்பு. ஏதாவது ஒன்றுக்கு ஒன்று நடந்து விட்டால், அப்புறம் நாங்கள் தானே அதற்குத் தண்டம் அழவேண்டும்? எனக்குக் கல்யாணமான நாலாவது நாளே என்னுடைய நகைகள் எல்லாம் திருட்டுப் போய்விட்டன. எல்லாரும் ரொம்ப நேரம் விழித்துக் கொண்டு தான் இருந்தோம். நாங்கள் கண் அயர்ந்த சமயமாகப் பார்த்துத் திருட்டுப் பயல்கள் நகைகளைக் கொண்டே போய்விட்டார்கள்! பத்தாயிரம் ரூபாய்க்குப் பிடித்தது சனியன்! அது மாதிரி இப்பொழுதும் ஏதாவது நடந்து விட்டால் நாங்கள் அடியோடு அழிந்து விடுவோம். வேண்டாம், அம்மா. வேண்டாம். உன் பணத்தை நீயே வைத்துக் கொள்!" என்றாள் பத்மா.

"அப்படியானால் சரி, நான் பணத்தைக் கொண்டு போய்விடுகிறேன். ஆனால் பணத்தை வாங்கிக் கொண்டு போய்விட்டேனே என்பதற்காக அலட்சியமாக இருந்து விடாதீர்கள். உன் புருஷனிடம் எப்படியாவது கூடிய சீக்கிரம் கங்கணத்தை வாங்குவதற்கு வேண்டிய வழி செய்யச் சொல்லு!" என்று சொல்லிவிட்டு, ரத்தன் வீட்டுக்குப் புறப்பட்டு விட்டாள்.

பத்மாவுக்குத் தன் தலையிலிருந்த பெரிய சுமை இறங்கியது போலிருந்தது. பொதுவாக வாழ்க்கையில் நமக்கு மிகவும் வேண்டியவர்கள் மூலம்தான் சில சமயம் பெரிய பெரிய துன்பங்கள் சேர்ந்து விடுகின்றன.

(தொடரும்)




### நல்ல யோசனை!

தாத்தா:—என்னடா மூர்த்தி, மார்க்கெட்டில் இப்பொழுது என்ன காய் மலிவாக விற்கிறது. தெரியுமா?

மூர்த்தி:—எனக்குக் கறிகாயைப் பற்றி என்ன தெரியும், தாத்தா? நான் ஹோட்டலில் அல்லவா சாப்பிடுகிறேன்?

தாத்தா:—அதனால்தான் உன்னைக் கேட்டேன். ஹோட்டலில் தினம் என்ன காய் சமைக்கிறான் என்று நீ சொன்னாயானால் எந்தக் காய் மலிவு என்று நான் கண்டு பிடித்து விடுவேன்!

●

### தெரிந்த லட்சணம்!

"உன்னுடைய புருஷனுக்குக் குதிரைப் பந்தயம் தெரியுமா?"

"ஓ! நன்றாகத் தெரியும். பந்தயத்துக்கு முதல் நாள், எந்தக் குதிரை ஜெயிக்கும் என்பதை ரொம்பத் திட்டமாகச் சொல்லி விடுவார். பந்தயத்துக்கு மறு நாள் அந்தக் குதிரை ஏன் ஜெயிக்க வில்லை என்பதையும் ரொம்பத் தெளிவாகச் சொல்லி விடுவார்!"

●

### உண்மைதான்!

"ஐயா, உங்கள் நாய் என் பிள்ளையின் காலைக் கடித்துச் சதையைப் பிடுங்கி விட்டது!"

"இருக்கவே இருக்காது! என் நாய் மாமிசத்தையே தின்னாது! தப்பித் தவறி மாமிசத்தில் வாய் வைத்தாலும் உடனே உதறி எறிந்து விடும்!"

●

### புதிய நிர்வாகம்!

"என்ன அப்பா! உங்கள் கம்பெனியைப் பற்றிய விளம்பரத்தைப் பத்திரிகையில் பார்த்தேன். அதில் 'முற்றிலும் புதிய நிர்வாகத்தின் கீழ் நடந்து வருகிறது' என்று பிரசுரிக்கப்பட்டிருந்தது. ஆனால் உன் ஆபீஸில் பழைய மானேஜர்தானே இருக்கிறார்!"

"ஆமாம், பழைய மானேஜர்தான். ஆனால் இப்பொழுதுதான் அவருக்கு இரண்டாம் விவாகம் நடந்தது!"

●

### அவ்வளவு மோசமா?

மனைவி:—நீங்கள் ஏன் நான் பாட ஆரம்பித்தால் வெளியே போய்த் திண்ணையில் உட்கார்ந்து விடுகிறீர்கள்? பாட்டுக் கேட்கப் பிடிக்கவில்லையா?

புருஷன்:—அப்படி ஒன்றுமில்லை. நான் உன்னை அடிக்கிறேன் என்று யாராவது நினைத்து விடுவார்களோ என்ற பயத்தினால் தான் வாசல் திண்ணைக்குப் போய் உட்கார்ந்து விடுகிறேன்!

# கிரைப் ஸிரப்



கிரைப் ஸிரப் குழந்தைகளுக் கேற்றசிறந்த பேதி மருந்து. வயிற் றுக் கோளாறென்ற சந்தேகமிருந் தால் ஒரு டோஸ் கிரைப் ஸிரப் கொடுங்கள்.

93  தயாரிப்பு

அழுகை
மாறி
புன்னகை

தயாரிப்பவர்கள் :

**மைசூர் இண்டஸ்ட்ரியல் அண்டு டெஸ்டிங் லாபரடேரி லிமிடெட்**

மல்லேஸ்வரம், பெங்களூர்

விற்பனை ஏஜண்டுகள் :

**மெஸர்ஸ். பெஸ்ட் அண்டு கம்பெனி லிமிடெட்**

தபால் பெட்டி நெ. 63, மதராஸ்

## சமயத்தில் வேண்டுவது பலசாலியான மனிதரே!

அம்ருதா பல ஹீனருக்கு ஓர் வரப்ரஸா தம். ஜீவ சக்தி அளிக் கும் உயர்ந்த டானிக்

KAE-4

**கேசரி குடீரம் லிட், மதராஸ்**

ஒரிஸ்ஸா, நைஜாம் சமஸ்தானங்கள், ஆந்திர ஜில்லாக்கள் தமிழ் நாடு களுக்கு ஏஜண்டுகள் :

**சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்**

பேஷாம்பூர், செகந்திராபாத், பெஜவாடா, மதுரை




# டன்லப்




DK 296 TM



தலை நிறைந்த கூந்தலே முகத்தின் அழகை எடுத்துக் காட்டுவது. கூந்தலே முக அழகை ஆக்குவதும் அழிப்பதும். கூந்தலழகையும் முக அழகையும் இன்றே கேசவர்த்தினியைக் கொண்டு விருத்தி செய்யுங்கள்.

அற்ப கேசத்தைவிட அழகுக்கு ஹானி வேறில்லை. இதைப் பரிஹரிக்கக் கேசவர்த்தினியைவிடச் சிறந்த மருந்துமில்லை. இழந்த கூந்தலையும் இளமையையும் கேசவர்த்தினியைக் கொண்டு இன்றே பெறுங்கள்.

அழகுள்ளவர் ஒரு சிலரே. ஆனால் கூந்தலழகையோ கேசவர்த்தினி உபயோகத்தால் ஒவ்வொருவரும் பெறலாம். கேச சம்பத்து படைத்தவர் அதை இழக்காமல் கேசவர்த்தினி கொண்டு காப்பாற்றுங்கள். படைக்காதவர் கேசவர்த்தினியால் அதை அடையுங்கள்.

# கேசவர்த்தினி

**கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது**

**விலை அணா 12**

(மேற் செலவு வேறு)

**எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்**

தயாரிப்பவர் :

**தென் இந்திய ரஸாயன சாலை**

**ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்.**



## அசட்டை வேண்டாம் பிஸ்மாக் சாப்பிடுங்கள்

போஜனத்திற்குப் பிறகு நெஞ்சு வலி, ஆயாசம் முதலிய ஜீரணக் கோளாறுகளினால் ஏன் கஷ்டப்படுகிறீர்கள். இவையெல்லாம் அதிகமான கெட்ட அமிலங்களினால் ஏற்படும் உபாதைகளாகையால்—ஒவ்வொரு தடவையும் போஜனத்திற்குப் பிறகு பிஸ்மாக் உட்கொள்ளுங்கள். எல்லா ஜீரணக் கோளாறுகளையும் வெகு சீக்கிரம் நிவர்த்தி செய்யக்கூடியது. பிஸ்மாக் (பைசுரேட்டட் மக்னீஷியா) மாத்திரையாகவோ பௌடராக விரும்பிச் சாப்பிடக்கூடியது.

உபயோகமற்ற போலிகளை வாங்காதீர்கள்! பிஸ்மாக் உட்கொண்டு நல்ல ஜீரண சக்தி அடையுங்கள். மாத்திரையாகவும் பௌடராகவும் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.







இந்தியாவுக்கு பூரண விநியோகஸ்தர்கள் :
ஜியோப்ரே மானர்ஸ் & கம்பெனி லிமிடெட்
பம்பாய், கல்கத்தா, சென்னை, லாகூர்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk Madras.

# தி இந்தியன் பாங்க் லிமிடெட்

★

**தலைமை ஆபீஸ் :**
**"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"**
**வடக்கு பீச் ரோடு, மதராஸ்**

★

**லோகல் ஆபீஸ்கள் :**
**எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்டு ரோடு, மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர்**

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

★

வழங்கி வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ரூ. 72,00,000

செலுத்தப்பட்ட
மூலதனம் ரூ. 53,00,000

ரிசர்வ் நிதி ரூ. 60,72,602

★

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

**N. கோபால அய்யர்**
செக்ரடரி



# 55 வயதில் பூரணப் பொலிவு பெற்ற தேக ஆரோக்கியம்

**அம்மனிதரும் அவரது மனைவியும் க்ருஷனை ஸ்லாகித்துக் கூறுகின்றனர்**

**"பணம் புத்திசாலித்தனமாக செலவழிந்தது"**

ஸ்த்ரீகளிலும் புருஷர்களிலும் அநேகருக்கு நடுத்தர வயது வந்தவுடனேயே சிறு வலி ஏற்படத் தொடங்குகிறது. அதற்கு "முதுமைப் பருவ"த்தையே காரணமாகக் கூறுகிறார்கள். ஆனால் பாட்ரிக் தம்பதிகள் மட்டும் அங்ஙனம் கூறுவதில்லை. இருபது வருஷங்களுக்கு மிகவும் சௌக்யமாக இருந்தவர்கள். அவர்களது அத்தகைய வாழ்க்கையின் தத்துவத்தை யாரும் சுலபமாகவும் சிக்கனமாகவும் கடைப் பிடிக்கலாம். மிஸஸ். பாட்ரிக் எழுதுகிறார் :—

"ஒரு விடுமுறை நாளில் கூடத் தவறாமல் கடந்த இருபது வருஷங்களில் பிரதி தினமும் காலை தேனீருடன் க்ருஷனையும் சாப்பிட்டோம். எங்கள் தேகாரோக்யத்தையே க்ருஷனுக்கே அர்ப்பணம் செய்ய வேண்டுமென நாங்கள் கூறத் தயங்க மாட்டோம். டாக்டர் செலவு கொஞ்சங்கூட இல்லையென்றே கூற வேண்டும். 55 வயதான போதிலும் என் கணவர் 45 வயதினராகவே தோற்றமளிக்கிறார். எத்தகைய சிரேஷ்டமை ஸ்திதியில் வேலை செய்ய வேண்டியவராயினும் என் கணவர் ஆரோக்யமே உருவானவர். க்ருஷன் சாப்பிடுமுன், அவரது கை முடக்குகளில் வாதத்தினால் கஷ்டப்பட்டார். அந்த வாதம் குணமடைந்து நெடுநாளாகிய போதிலும், அவர் க்ருஷன் சாப்பிடத் தவறுவதில்லை. க்ருஷன் சால்ட்ஸ் வாங்குவதில் நாங்கள் பணம் செலவிட்டது விரயமேயில்லை—புத்திசாலித்தனமாகும்."—(மிஸஸ்) எச். வி. பாட்ரிக்.

ஆறு வகைப்பட்ட இயற்கை உப்புக்களின் சேர்க்கைதான் க்ருஷன். குடல், மூத்திர கோசம், ஜீரணாசய பாதை ஆகியவற்றை ஆரோக்யத்துடன் சரிவர வேலை செய்யத் தூண்டுகிறது. தேகத்தின் கட்டுறுதியையும் இரத்த ஓட்டத்தையும் சுத்தமாக வைத்துக்கொள்ள உதவுகிறது. எல்லா கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் க்ருஷன் சால்ட்ஸ் பாட்டில் ஒன்றுக்கு ரூ. 1-10-0 விதம் கிடைக்கும்.

Regd No. M. 4392

License No. 18
Licensed to post without prepaymen

மணம் கமழ்வது!




# ராஜா ஸ்னோ ஹேர் ஆயில்

MANYAM & CO.
MADRAS &
BANGALORE.

murli

பம்பாய் ஆபீஸ்: 142, ஓல்டு மோடி ஸ்ட்ரீட், போர்ட். இலங்கைக்கு சோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்
மெஸர்ஸ். துரை, அருள் & கோ., லிட்., 93, கெய்ஸர் தெரு, கொழும்பு